

ஸ்ருக் படம் 1



ஸ்ருக் படம் 2



ஸ்ருக் படம் 3


ஸ்ருவம்

பிறகு அதே தர்ப்பங்களை ஜலத்தைத் தொட்டுத் துடைத்து விட்டு, ஸ்ருவத்திற்குச் செய்தது போலவே ஸ்ருக்கிற்கும் துடைத்தலைச் செய்து, ப்ரோக்ஷித்து அக்னியில் காய்ச்சி ஸ்ருவத்திற்கு வடக்கில் வைத்தபின் தர்ப்பங்களை ப்ரோக்ஷித்து, அல்லது ஜலத்தால் துடைத்து கிழக்கு நுனியாக இருக்கும்படி அக்னியில் போடவும். துடைக்க நான்கு தர்ப்பங்கள் எடுத்துக் கொண்டால் போதும்.

தெளிவைக்கருதி படத்தில் ஸ்ருவத்திற்குப் பதிலாக ஸ்ருக்கின் துடைப்பே காட்டப்பட்டிருக்கிறது.

படத்தில் அம்புக் குறி, துடைக்கும்போது தர்ப்பம் போகும் வழியையும், எண்கள், துடைப்பின் ஆரம்பம், தொடர்ச்சி, முடிவு இவைகளையும் காட்டுகின்றன.

दर्वीस्रुवावथादाय दक्षिणेन करेण तु ।
सव्येन दर्भानादाय संयोज्याग्नौ प्रतापयेत् ॥ ३६ ॥
प्रताप्य सकुशौ दर्वीस्रुवौ दर्वीं निधाय च
स्रुवस्य बिलमग्रैस्तु, पृष्ठमभ्यात्ममग्रतः ॥ ३७ ॥
आरभ्य पृष्ठतो यावत् उपरिष्टात् बिलं भवेत् ।
कुशानां मूलतो दण्डं एकैकं विमृजेत वै ॥ ३८ ॥
प्रोक्ष्य प्रताप्य चासाद्य बर्हिष्युत्तरतो घृतात् ।
संमृज्य तैः कुशैर्दर्वीं आसाद्योत्तरतः स्रुवात् ॥ ३९ ॥
तान् कुशान् कृतसंमार्गान् प्रोक्ष्याग्नौ प्रहरेदथ ॥ ४० ॥
कुमारिलस्वामिकारिका [१. २. श्लोकाः ३६-४०]

अग्रतः—कुशानामग्रभागैः । एकैकम्—स्रुवस्य बिलं, पृष्ठं, दण्डं चेत्यर्थः ।

## ६. (१) अग्न्यलङ्करणम्

विश्वानि नः इति तृचस्य आत्रेयः वसुश्रुतः ऋषिः । त्रिष्टुप् छन्दः । अग्निर्देवता । अग्न्यलंकरणे विनियोगः ।

विश्वानि नो दुर्गहा जातवेदः सिन्धुं न नावा दुरितातिपर्षि ।
अग्ने अत्रिवन्नमसा गृणानो३स्माकं बोध्यविता तनूनाम् ॥
यस्त्वा हृदा कीरिणा मन्यमानः अमर्त्यं मर्त्यो जोहवीमि ।
जातवेदो यशो अस्मासु धेहि प्रजाभिरग्ने अमृतत्वमश्याम् ॥
यस्मै त्वं सुकृते जातवेदः उ लोकमग्ने कृणवः स्योनम् ।
अश्विनं स पुत्रिणं वीरवन्तं गोमन्तं रयिं नशते स्वस्ति ॥

[ऋ. ५.४.९-११]

इति अग्निं परितः ऐशानीतः आरभ्य, द्वयोः ऋचोः अष्टभिः पादैः अष्टसु दिक्षु अक्षतान् विकीर्य, तृतीयया ऋचा अग्निं स्तुत्वा—

अग्नये नमः, आत्मने नमः, सर्वेभ्यो ब्राह्मणेभ्यः - श्रीवैष्णवेभ्यः- नमः- इति अक्षतान् विकीर्य—

## ६. (२) इध्महोमः

इध्ममादाय, इध्मरज्जुं अनूयाजसमिधं च वरुणपात्रे निधाय, इध्मं त्रिरभिघार्य, इध्ममलङ्कृत्य, स्वयं अलंकुर्यात् ।

अस्मिन् विच्छिन्नाग्निसन्धानकर्मणि ब्रह्मन् इध्मं आधास्ये—

" ओम्, आधत्स्व " इति प्रतिवचनम् ।

अयं त इध्म इत्यस्य मन्त्रस्य वामदेवः ऋषिः । त्रिष्टुप् छन्दः । जातवेदाः अग्निः देवता । इध्माधाने विनियोगः ॥

**अयं ते इध्मः आत्मा जातवेदः, तेनेध्यस्व, वर्धस्व चेद्ध, वर्धय च । अस्मान् प्रजया पशुभिः ब्रह्मवर्चसेनान्नाद्येन समेधय स्वाहा ॥**

इति समिधः अग्नौ निधाय— [आश्व. गृह्यसूत्रमन्त्रः १. १०. १२]

अग्नये जातवेदसे समिध्यमानाय इदं, न मम—

## ६. (३) आघारहोमः

प्रजापतिं मनसा ध्यायन् स्रुवेणैव तूष्णीं आघारौ आघारयति ।

वायव्यात् आग्नेयान्तम्—अविच्छिन्नां आज्यधारां स्रावयति ।

स्वाहा—प्रजापतय इदम्, न मम ।

नैर्ऋत्याः ऐशान्यन्तम् ।

स्वाहा—प्राजपतय इदम्, न मम ॥

## ६. (४) अग्नीषोमीयहोमः

तेनैव स्रुवेण आज्यमादाय,

अग्नये स्वाहा—अग्नय इदम् , न मम—(अग्नेः उत्तरभागे)

सोमाय स्वाहा—सोमाय इदम् , न मम—(अग्नेः दक्षिणभागे)

## ६. (५) प्रायश्चित्तहोमः

प्राणानायम्य, अन्वाधानप्रभृति एतत्क्षणपर्यन्तं मध्येसम्भावित-समस्तदोषप्रायश्चित्तार्थं सर्वप्रायश्चित्तं होष्यामि ॥

ओम् भूर्भुवस्स्वः-स्वाहा—प्रजापतय इदम् , न मम।

**ப்ரயோக விளக்கம்**

### 6 (1) அக்னி அலங்கரணம்

**விச்வானி** என்றுதொடங்கி **அம்ருதத்வமச்யாம்** என்கிறவரையிலுள்ள எட்டு மந்த்ரபாதங்களை சொல்லிக் கொண்டே அக்னிக்கு வடகிழக்கில் தொடங்கி அக்னியைச் சுற்றிலும் எட்டு திசைகளில் சிறிது சிறிது அக்ஷதை சேர்க்க. பிறகு **யஸ்மை த்வம்** என்ற ரிக்கைகை கூப்பிச் சொல்ல. முடிவில் **அக்னயே நம:** என்பதைச் சொல்லி அக்னிக்கு அருகில் அக்ஷதை சேர்த்து அஞ்சலி செய்க. **ஆத்மனே நம;** என்று **கர்த்தா** தன் சிரஸில் அக்ஷதை சேர்த்துக் கொண்டபின், **ஸர்வேப்ய: ஸ்ரீ வைஷ்ணவேப்ய; ப்ராஹ்மணேப்ய: நம:** என்று ஸ்வாமிகளின் அருகில் அக்ஷதை சேர்த்து—

### 6 (2) இத்ம ஹோமம்

இத்மத்தை எடுத்து, அதைக்கட்டின கயிற்றையும் ஒரு ஸமித்தையும் பூர்ண பாத்ரத்தின் மேல் வைத்து விட்டு, மீதியுள்ள பதினைந்துஸமித்துக்களின் மேல் ஸ்ருவத்தினுல் நெய்யை இரண்டு முறை தாரையாக விட்டு, இத்மத்தின் மேல் அக்ஷதை சேர்த்து அலங்கரித்தபின், **கர்த்தா** தன்னையும் அக்ஷதை சேர்த்து அலங்கரித்துக் கொள்ளவும். பிறகு **அஸ்மின்** என்று தொடங்கி **ஆதாஸ்யே** என்கிற வரை சொல்லி ப்ரஹ்மாவிடம் இத்ம ஹோமம் செய்ய அனுமதி கேட்டு, **ஆதத்ஸ்வ** என்று பதில் கிடைத்தவுடன்

**அயம் தே** என்று தொடங்கி **ஸ்வாஹா** என்கிற வரை சொல்லி, ஸமித்துக்களை அக்னியில் வைத்து, பிறகு ஜலத்தைத் தொடவும். **அயம் தே** என்ற இம் மந்த்ரம் ஸூத்ரகாரர் கொடுத்திருப்பது. ஸ்வரம் தேவையில்லை. [ஸூத்ரம். 1-10-12]

## 6.(3) ஆகா (घा) ர ஹோமம்

ஹோம தேவதையை மனத்தில் நினைத்துக் கொண்டு இரண்டு ஆகார ஹோமங்களை ஸ்ருவத்தினால் செய்ய வேண்டும். நெய்யை ஸ்ருவத்தில் தேவையான அளவு எடுத்து வடமேற்கிலிருந்து தென் கிழக்குப் பகுதிவரை **ஸ்வாஹா - ப்ரஜாபதயே இதம்** என்று நினைத்துக் கொண்டு அக்னியில் தாரையாக ஹோமம் செய்க. இதே போல் தென் மேற்குப் பகுதியிலிருந்து வடகிழக்குப் பகுதி வரை அதே மந்திரத்தை மனத்தில் நினைத்துக்கொண்டு நெய்யைத் தாரையாக விட்டு ஹோமம் செய்யவும்.

## 6.(4) அக்னீஷோமீய ஹோமங்கள்

ஸ்ருவத்தில் நெய்யை எடுத்து — **அக்னயே ஸ்வாஹா** என்று சொல்லி அக்னியின் (உத்தரத;) வடக்குப் பகுதியில் அக்னியில் ஹோமம் செய்க. **ஸோமாய ஸ்வாஹா** என்று சொல்லி அக்னிக்குத் தென் பகுதியில் அக்னியில் ஹோமம் செய்க. அக்னிக்கு வடகிழக்குப் பகுதியிலும் தென் கிழக்குப் பகுதியிலும் செய்வது யஜுர் வேதிகளின் அனுஷ்டானம். கீழே தந்துள்ள காரிகை காண்க.

जुहुयादग्नये स्वाहेति उदगाज्यं स्रुवेण तु ।
तेनैव जुहुयादाज्यं सोमायेति तु दक्षिणे ॥ [1-2-46]

## 6.(5) ப்ராயச் சித்த ஹோமம்

ப்ராணாயாமம் செய்து, **அன்வாதான ப்ரப்ருதி**-என்று தொடங்கி **ஸ்வாஹா** என்கிற வரை சொல்லி, ஒருஹோமம் ஸ்ருவத்தினால் நெய் எடுத்துச் செய்யவும்.

குறிப்பு:—6. (1) அக்னிக்கு அலங்காரம் அக்ஷதைகளால் செய்யப்படுகிறது.

6 (2) இத்ம ஹோமத்தின் போது ஒரு ஸமித்தை அனுயாஜத்திற்காக எடுத்து வைத்து, ஸ்விஷ்டக்ருத் ஹோமம் செய்த பிறகு, **தேவேப்யஸ் ஸ்வாஹா** என்று அக்னியில் இடவேண்டும் என்பர். இதைச் சிலர் செய்வதில்லை.

6 (3) **ஆகார ஹோமம்**—ஆகாரம் என்பதற்கு தாரையாக விடுதல் என்பது பொருள். நெய்யைத் தாரையாக விடுவதனாலே இந்த ஹோமத்திற்கு இப்பெயர் வந்தது. இதை ஸ்ருவத்தினாலேயே செய்ய வேண்டும்.

6 (4) **அக்னீ ஷோமீய ஹோமம்**—இதில், அக்னி ஸோமன் என்ற இருவருக்கும் ஹோமம் செய்வதால் இதற்கு இப்பெயர் வந்தது. ஆஜ்யபாகம் என்பது, இதன் மற்றொரு பெயர். இதையும் ஸ்ருவத்தினால் தான் செய்ய வேண்டும்.

6 (5) ப்ராணாயாமம் செய்யாமலும் பிராயச்சித்த ஹோமம் சிலர் செய்கிறார்கள். அப்படியும் செய்யலாம். பூர்புவஸ்ஸ்வ: என்பதற்கு ரிஷி, தேவதை, சந்தஸ் இவைகளைச் சிலர் சொல்கிறார்கள்.

## ७. अथ अष्टौ प्रधानहोमाः

एकैकमपि होमं चतुर्गृहीतेन आज्येन जुहोति ।

चतुर्गृहीतं गृहीत्वा [ स्रुवेणाज्यमादाय स्रुचि निधाय जुहुयात् ]

१. **त्वमग्ने** इत्यस्य मन्त्रस्य आत्रेयः सुतंभरः ऋषिः । गायत्री छन्दः । अग्निर्देवता । विच्छिन्नाग्निसन्धान प्रधानाज्यहोमे विनियोगः—

**त्वमग्ने सप्रथा असि जुष्टो होता वरेण्यः ।**

**त्वया यज्ञं वि तन्वते ॥** [ऋ. ५. १३. ४.]

स्वाहा - अग्नये सप्रथसे इदं, न मम ।

२. **यो अग्नि**मित्यस्य मन्त्रस्य काण्वः मेधातिथिः ऋषिः । गायत्री छन्दः । अग्निर्देवता । प्रधानाज्यहोमे विनियोगः—

**यो अग्निं देववीतये हविष्मान् आविवासति ।**

**तस्मै पावक मृळय ॥** [ऋ. १. १२. ९.]

स्वाहा - अग्नये पावकाय इदं, न मम ।

३. **तन्तुं तन्वन्** इत्यस्य देवाः ऋषयः । जगती छन्दः । अग्निर्देवता । प्रधानाज्यहोमे विनियोगः—

**तन्तुं तन्वन् रजसो भानुमन्विहि ज्योतिष्मतः पथो रक्ष धिया कृतान् ।**

**अनुल्बणं वयत जोगुवाम् अपो मनुर्भव जनया दैव्यं जनम् ॥**

स्वाहा - अग्नये तन्तुमते इदं, न मम । [ऋ. १०. ५३. ६.]

४. **सप्त ते** इत्यस्य मन्त्रस्य वामदेवः ऋषिः । जगती छन्दः । अग्निर्देवता । प्रधानाज्यहोमे विनियोगः—

**सप्त ते अग्ने समिधः सप्त जिह्वाः सप्त ऋषयः सप्त धाम प्रियाणि ।**

**सप्त होत्राः सप्तधा त्वा यजन्ति सप्त योनीरा पृणस्व घृतेन स्वाहा ॥**

अग्नये सप्तवते इदं, न मम । [वाज. संहिता-१७-७९]

५. **त्वन्नो अग्ने** इत्यस्य मन्त्रस्य गौतमः वामदेवः ऋषिः । त्रिष्टुप् छन्दः । अग्नीवरुणौ देवता । प्रधानाज्यहोमे विनियोगः—

**त्वं नो अग्ने वरुणस्य विद्वान् देवस्य हेळोऽव यासिसीष्ठाः ।**

**यजिष्ठो वह्नितमः शोशुचानः विश्वा द्वेषांसि प्र मुमुग्ध्यस्मत् ॥**

स्वाहा - अग्नीवरुणाभ्यां इदं, न मम । [ऋ. ४. १. ४.]

६. **स त्वन्नो अग्ने** इत्यस्य. मन्त्रस्य गौतमः वामदेवः ऋषिः । त्रिष्टुप् छन्दः । अग्नीवरुणौ देवता । प्रधानाज्यहोमे विनियोगः—

**स त्वं नो अग्नेऽवमो भवोती नेदिष्ठो अस्या उषसो व्युष्टौ ।**

**अव यक्ष्व नो वरुणं रराणो वीहि मृळीकं सुहवो न एधि ॥**

स्वाहा - अग्नीवरुणाभ्यां इदं, न मम । [ऋ ४. १. ५.]

७. **मनोज्योति**रित्यस्य गौतमः वामदेवः ऋषिः । त्रिष्टुप् छन्दः । मनोज्योतिर्देवता - प्रधानाज्यहोमे विनियोगः—

**मनोज्योतिर्जुषतामाज्यं मे विच्छिन्नं यज्ञं समिमं दधातु ।**

**या इष्टा उषसो या अनिष्टाः ताः सन्तनोमि हविषा घृतेन स्वाहा ॥**

मनसे ज्योतिषे इदं, न मम । [आश्व. श्रौ. सू. मन्त्रः-२. ५. १४.]

८. **पुनस्त्वादित्याः** इति मन्त्रस्य गौतमः वामदेवः ऋषिः । त्रिष्टुप् छन्दः । वसुनीथः अग्निर्देवता । प्रधानाज्यहोमे विनियोगः—

**पुनस्त्वादित्याः रुद्रा वसवः समिन्धताम् पुनर्ब्रह्माणो वसुनीथ यज्ञैः ।**

**घृतेन त्वं तन्वं वर्धयस्व सत्याः सन्तु यजमानस्य कामाः ॥**

स्वाहा - वसुनीथाय अग्नये इदं, न मम । [वाज. संहिता-१२. ४४.]

**ப்ரயோக விளக்கம்**

(7) **எட்டு ப்ரதான ஹோமங்கள்.**

ஒவ்வொரு ஹோமத்தையும் நான்கு முறை எடுத்த நெய்யினால் செய்யவேண்டும். நான்கு முறை நெய்யை எடுத்துக் கொண்டு, **த்வமக்னே இத்யஸ்ய** என்று தொடங்கி **ஸ்வாஹா** என்கிற வரை சொல்லியவுடன் ஹோமம் செய்து, பிறகு, **அக்னயே ஸப்ரதஸே இதம் ந மம** என்று சொல்லி முடிக்க வேண்டும். இதே போல் மீதியுள்ள ஏழு ஹோமங்களையும் செய்யவும்.

குறிப்பு:—ஸ்ருக் என்ற பெரிய தர்வியின் (பலாச இலையின்) அடிப்பகுதியை மடக்கி அதைக் குழிவுடையதாகச் செய்து கொண்டு, இடது கை விரல்களால் பிடித்துக் கொண்டு, வலது கையால் ஸ்ருவம் என்ற சிறிய பலாச இலையாலே நெய்ப்பாத்ரத்தி லிருந்து **நான்கு தடவை** கொஞ்சம் கொஞ்சமாக நெய்யை எடுத்து இடது கையிலுள்ள ஸ்ருக்கில் விட்டு, ஸ்ருவத்தை நெய்ப் பாத்ரத் தின் மேல் வைத்துவிட்டு, இடது கையிலுள்ள ஸ்ருக்கை வலது கைக்கு மாற்றிக் கொண்டு, இடது கையால் நெய்ப் பாத்ரத்தைப் பிடித்துக்கொண்டு, பிறகு மந்த்ரத்தைச் சொல்லி, **ஸ்வாஹா** என்று சொல்லும்போது அக்னிமத்தியில் ஹோமம் செய்யவும். பிறகு **ந மம** என்பதைச் சொல்லவும். இதன் பின் வலது கையிலுள்ள ஸ்ருக்கைஇடது கையில் வாங்கிக் கொண்டு, முன் போல் ஸ்ருவத்தினுல் நான்கு முறை நெய்யை எடுத்து அதில் விட்டு, ஸ்ருவத்தை கீழே வைத்து, ஸ்ருக்கை வலது கையில் வாங்கி மந்திரம் சொல்லி ஹோமம் செய்யவேண்டும். இவ்வாறு ஏழு ஹோமங்களும் செய்யப்படவேண்டும்.

இரண்டாவது ஹோமத்தில் **அக்னயே பாவகாய** என்பதற்குப் பதிலாக **அக்னயே ஹவிஷ்மதே** என்று சிலர் சொல்கிருர்கள்.

**சதுர் க்ருஹீதம்**—நான்கு தடவை எடுக்கப்பட்டது. **ஸக்ருத் க்ருஹீதம்.** ஒரு தடவை எடுக்கப்பட்டது. இங்கு நெய்யைக் குறித்தது.

**ஸப்த தே—மனோஜ்யோதி:— புனஸ்த்வாதித்யா:** என்பவை ரிக்வேதமந்த்ரங்கள் அல்ல. அவைகள் இருக்குமிடங்கள் ஆங் காங்கே குறிப்பிடப்பட்டுள்ளன.

## ८. (१) अथ पञ्च प्रधानहोमाः, सकृद्गृहीतेनाज्येन (स्रुवेण)

१. अग्नये पवमानाय स्वाहा—अग्नये पवमानाय इदं न मम ।

२. अग्नये पावकाय स्वाहा—अग्नये पावकाय इदं न मम ।

३. अग्नये शुचये स्वाहा—अग्नये शुचये इदं न मम ।

४. अग्नये पथिकृते स्वाहा—अग्नये पथिकृते इदं न मम ।

५. अग्नये तन्तुमते स्वाहा—अग्नये तन्तुमते इदं न मम ।

८. (२) स्विष्टकृद्धोमः । सकृद्गृहीतेन आज्येन (स्रुवेण)

**यदस्ये**त्यस्य मन्त्रस्य हिरण्यगर्भः ऋषिः । अतिधृतिः छन्दः । अग्निः स्विष्टकृत् देवता । स्विष्टकृद्होमे विनियोगः—

**यदस्य कर्मणः अत्यरीरिचम् यद्वा न्यूनमिहाकरम् ।**

**अग्निष्टत् स्विष्टकृद् विद्वान् सर्वं स्विष्टं सुहुतं करोतु मे ॥**

**अग्नये स्विष्टकृते सुहुतहुते सर्वप्रायश्चित्ताहुतीनां कामानां समर्धयित्रे; सर्वान्नः कामान् समर्धय स्वाहा ॥**

[आश्व. गृ. सू. मन्त्रः १. १०. २२]

उत्तरपुरस्तात् जुहोति; अग्नये स्विष्टकृते इदं, न मम ॥ अपः उपस्पृश्य—

**ப்ரயோக விளக்கம்:**

8 (1) **பிறகு செய்யப்படும் ஐந்து ப்ரதான ஹோமங்கள்:**

ஐந்து ஆஹுதிகள் ஸ்ருவத்தினுல் ஒரு தடவை எடுத்த நெய்யினுல் செய்யப் படவேண்டும். **அக்னயே** என்று தொடங்கி ஐந்தாவது மந்த்ரத்திலுள்ள **இதம்** என்ற வரை சொல்லி, ஒவ்வொரு மந்த்ரத்தின் முடிவிலும் **ஸ்வாஹா** என்று சொல்லும்போது ஹோமம் செய்யவேண்டும்.

**ப்ரயோக விளக்கம்**

8. (2) **ஸ்விஷ்டக்ருத் ஹோமம்**

இது, ஸ்ருவத்தினுல் ஒரு தடவை எடுத்த நெய்யைக் கொண்டு செய்யப்பட வேண்டும். **மந்த்ரம் யதஸ்ய** என்பது.

**யதஸ்ய** என்று தொடங்கி, **ஸ்வாஹா** என்று சொல்லும்போது ஹோமம் செய்ய வேண்டும். ஹோமம் செய்தபின் ஜலத்தைத் தொடவும். **யதஸ்ய** என்பது ரிக்வேதத்தில் இல்லை. ஸூத்ரகாரர் ஆச்வலாயனர் தமது க்ருஹ்ய ஸூத்ரத்தில் கொடுத்திருக்கிருர்.

சிலர் இதையும் சதுர்க்ருஹீதமான நெய்யைக் கொண்டு ஸ்ருக்கிஞல் செய்கிருர்கள். வழக்கத்தை அனுசரிப்பது.

குறிப்பு :— उत्तरार्धात् सौविष्टकृतम् (1–10–20) என்ற ஆச்வலாயன க்ருஹ்ய ஸூத்ரத்திலிருந்து, ஸ்விஷ்டக்ருத் ஹோமத்தை ப்ரதான ஹோமம் போல் செய்ய வேண்டும் என்று ஏற்படுகிறது. இங்கு முதலில் செய்த எட்டு ஹோமங்கள் சதுர் க்ருஹீதமான நெய்யினுலும், பிறகு செய்த ஐந்து ஹோமங்கள் ஸக்ருத்க்ருஹீதமான நெய்யினுலும் செய்யப்பட்டதால் இவ்விரண்டில் எதை அனுசரிப்பது என ஸந்தேஹம் எழலாம். தற்போது செய்யப்போகும் ஸ்விஷ்டக்ருத் ஹோமத்திற்கு அடுத்து முன்ஞல் செய்யப் பட்டது, ஸக்ருத் க்ருஹீதமானதால் அதைப் பின்பற்றி ஸக்ருத் க்ருஹீதமாகச் சிலர் செய்கின்றனர். சதுர்க்ருஹீதமாகச் செய்தால் ஸக்ருத் க்ருஹீதம் அதில் அடங்கும் என்பது காரணமாக, சதுர் க்ருஹீதமாகவும் பலரால் இது செய்யப்படுகிறது. முத்து தீக்ஷிதர் சதுர் க்ருஹீதமாகச் செய்யச் சொல்லியிருக்கிருர்.

## ९. (१) अनुयाजसमिद्धोमः

पूर्णपात्रोपरिनिहितं अनुयाजसमिधमादाय—

वसुभ्यः स्वाहा - इति समिधमग्नौ निधाय, वसुभ्य इदं, न मम इत्युक्त्वा—

## ९. (२) इध्मरज्जुहोमः

इध्मरज्जुमादाय, ग्रन्थिं विस्रस्य आज्यप्लुतां कृत्वा, रुद्राय स्वाहा- अग्नौ निधाय, रुद्राय तन्तिचरायेदं, न मम। अप उपस्पृश्य-

## ९. (३) संस्रावहोमः

स्रुवेणाज्यं गृहीत्वा—

विश्वेभ्यः देवेभ्यः स्वाहा—हुत्वा—

विश्वेभ्यो देवेभ्यः संस्रावभागेभ्यः इदं, न मम।

## ९. (४) कर्त्रा क्रियमाणाः सप्त प्रायश्चित्तहोमाः ।

स्रुवेण सकृद्गृहीतेनाज्येन—

(१) **अयाश्चेत्यस्य** विमदः (वामदेवो वा) ऋषिः । पदपङ्क्तिः छन्दः । अयाः अग्निर्देवता । प्रायश्चित्तार्थे आज्यहोमे विनियोगः—

**अयाश्चाग्ने असि अनभिशस्तीश्च सत्यमित् त्वं अयाः असि ।**

**अयासा वयसा कृतः, अया सन् हव्यमूहिषे ।**

**अया नो धेहि भेषजं स्वाहा ।।** [आश्व. श्रौ. सू–१. ११. ३.]

अग्नये अयासे इदं, न मम ।।

(२) **अतो देवा** इत्यस्य मेधातिथिः ऋषिः । गायत्रीच्छन्दः । देवाः देवताः । प्रायश्चित्तार्थे आज्यहोमे विनियोगः—

**अतो देवा अवन्तु नो यतो विष्णुर्विचक्रमे ।**

**पृथिव्याः सप्त धामभिः ।।** [ऋ. १. २२. १६.]

देवेभ्यः स्वाहाः - देवेभ्य इदं, न मम ।

(३) **इदं विष्णु**रित्यस्य मेधातिथिः ऋषिः । गायत्रीच्छन्दः । विष्णुर्देवता । प्रायश्चित्तार्थे आज्यहोमे विनियोगः—

**इदं विष्णुर्वि चक्रमे त्रेधा नि दधे पदम् ।**

**समूळ्हमस्य पांसुरे ।।** [ऋ. १. २२. १७.]

विष्णवे स्वाहा - विष्णवे इदं - न मम ।

व्याहृतीनां व्यस्तानां समस्तानां च विश्वामित्र-गौतम-अत्रि-भरद्वाजाः ऋषयः । गायत्री-उष्णिक्-अनुष्टुप्-बृहत्यः छन्दांसि । अग्नि-वायु-सूर्य-प्रजापतयो देवताः । प्रायश्चित्तार्थे आज्यहोमे विनियोगः—

(४) ओम् भूः स्वाहा — अग्नये इदं न मम ।
(५) ओम् भुवः स्वाहा — वायवे इदं न मम ।
(६) ओम् स्वः स्वाहा — सूर्याय इदं न मम ।
(७) ओम् भुर्भुवस्स्वः स्वाहा — प्रजापतये इदं न मम ।

**(५) ब्रह्मणा कर्तव्याः सप्त प्रायश्चित्ताहुतयः ।**

ब्रह्मन्, सप्ताहुतीर्जुहुधि (अथवा होष्यामि) कर्तुः वाक्यम् ।

होष्यामि (अथवा जुहुधि) इति ब्रह्मणः प्रतिवचनम् । ब्रह्मा, ऋषिदेवताच्छन्दोवर्ज **अयाश्चे**त्यारभ्य **प्रजापतये इदम्** इत्येतदन्तं उक्त्वा प्रतिमन्त्रं जुहुयात् । कर्ता, न मम इति स्वस्वत्व-त्यागमात्रं कुर्यात् । अथवा ब्रह्मणा अन्वारब्धः स्वयमेव कुर्यात् । ब्रह्मा न भवति चेत् स्वयं कर्ता कुर्यात् ॥

**होममन्त्राः**

(१) अयाश्चाग्ने असि अनभिशस्तीश्च सत्यमित् त्वं अया असि । अयासा वयसा कृतः अया सन् हव्यमूहिषे ।

अया नो धेहि भेषजम् स्वाहा—अग्नये अयासे इदं, न मम ।

(२) अतो देवा अवन्तु नो यतो विष्णुर्विचक्रमे । पृथिव्याः सप्त धामभिः ॥ स्वाहा—देवेभ्यः इदं, न मम ।

(३) इदं विष्णुर्वि चक्रमे त्रेधा नि दधे पदम् । समूळ्हमस्य पांसुरे ॥ स्वाहा—विष्णवे इदं, न मम ।

(४) ओम् भूः स्वाहा — अग्नये इदं न मम ।
(५) ओम् भुवः स्वाहा — वायवे इदं न मम ।
(६) ओम् स्वः स्वाहा — सूर्याय इदं न मम ।
(७) ओम् भूर्भुवःस्वः स्वाहा – प्रजापतये इदं न मम ।

**ப்ரயோக விளக்கம்:**

### 9. (1) அனுயாஜஹோமம்

பூர்ண பாத்ரத்தின் மேல் வைத்திருந்த அனுயாஜ ஸமித்தை எடுத்து, **வஸுப்ய: ஸ்வாஹா,** என்று அக்னியில் வைக்கவேண்டும். சிலர், **தேவேப்ய: ஸ்வாஹா, தேவேப்ய: இதம், ந மம** என்பர்.

குறிப்பு:-அனுயாஜ ஹோமம் செய்ய வேண்டாம் என்று உரையாசிரியர் நாராயணர் கூறுவர். 'अनुयाजसमिच्च न कार्या, विध्यभावात् ।' 4-6-4- பக்கம். 173; "गृह्येषु अनुयाजाभावात् अनुयाजसमित् न कार्या" என்பர் க்ருஹ்யரத்ன கண்டபூஷண நூலாசிரியர்.

**ப்ரயோக விளக்கம்:**

### 9. (2) இத்மரஜ்ஜு ஹோமம்

பூர்ண பாத்ரத்தின் மேல் வைத்திருந்த, இத்மம் கட்டிய கயிற்றை நன்ருக அவிழ்த்து அதன் மேல் நெய்யை விட்டு, **ருத்ராய ஸ்வாஹா** என்று சொல்லி அக்னியில் வைக்கவேண்டும்.

**ப்ரயோக விளக்கம்**

### 9. (3) ஸம்ஸ்ராவ ஹோமம்

**ஸம்ஸ்ராவம்** என்பதற்கு, எஞ்சியது என்பது பொருள். ஹோமம் செய்த பின் எஞ்சிய நெய்யை விச்வேதேவர்களுக்கு, **விச்வேப்ய: தேவேப்ய: ஸ்வாஹா** என்று சொல்லி ஹோமம் செய்யவேண்டும்.

**குறிப்பு:-** பூர்ணாஹுதியுட்பட எல்லா ஆஹுதிகளையும் செய்த பின் எஞ்சியிருப்பதைத்தான் விச்வேதேவர்களுக்குத் தரவேண்டுமாதலால் பூர்ணாஹுதிக்குப் பிறகு இதைச் செய்ய வேண்டும் என்பர் ப்ரயோக பாரிஜாத நூலாசிரியர். "पूर्णाहुतिं जुहुयात् । ...... तत: विश्वेभ्यो देवेभ्य इति संस्रावं हुत्वा" என்பது (பக்கம் 66) அவர் வாக்யம். ஆனல் அனுஷ்டானம் இங்கு தந்திருப்பது போல்தான் உள்ளது.

**ப்ரயோக விளக்கம்:**

9. (4) **கர்த்தா செய்யும் ஏழு ப்ராயச்சித்த ஹோமங்கள்**

ஸ்ருவத்தினுல் நெய்யை எடுத்து, **அயா: ச** என்று தொடங்கி **ஓம் பூர்புவஸ்ஸ்வ: ஸ்வாஹா** என்கிற வரையுள்ள ஏழு மந்த்ரங்களைச் சொல்லி ஏழு ஹோமங்கள் செய்யப்பட வேண்டும்.

**குறிப்பு:**—அயா: ச என்பது ரிக்வேதத்தில் இல்லை. க்ருஹ்ய-ச்ரௌத-ஸூத்ரகாரர்கள் பலரும் கொடுத்திருக்கிருர்கள். வேதங்களில் மைத்ராயணீ ஸம்ஹிதையில் இந்த மந்த்ரம் நல்ல பாடத்துடன் காணப்படுகிறது.

"अयाश्चाग्नेऽस्यनभिशस्तिश्च सत्यमित्त्वमया असि । अयाः सन् मनसा कृत्तोऽयाः सन् हव्यमूहिषेऽया नो धेहि भेषजँ स्वाहा" [मैत्रायणीसंहिता १-४-३] இந்த ஏழு ஹோமங்களையும் விதிக்கும் ஸூத்ரத்தில் ஆச்வலாயனர் இம்மந்த்ரத்தை முற்றிலும் கொடுத்திருக்கிருர்.

"अयाश्चाग्ने......अतो देवा अवन्तु न इति द्वाभ्यां व्याहृतिभिश्च...स्वाहेति॥" [आश्व.श्रौ. सू. १-११-१३] "स्थाल्याः स्रुवेणादाय सर्वप्रायश्चित्तानि जुहुयात् स्वाहाकारान्तैः मन्त्रैः ।" [आश्व. श्रौ. सू. १-११-१०] என்ற ஸூத்ரத்தில் ஸ்ருவத்தால் ஹோமம் செய்வதையும் விதிக்கிருர். ஹோமம் செய்யும்போது **அக்னயே அயஸே** என்றுதான் சொல்லுகிருர்கள். உண்மையில் **அக்னயே அயாஸே** என்று சொல்வதுதான் நலம். **ப்ர பா** ..பக்கம் 65 **காண்க. அய:** என்ற பதத்திற்கு நான்காம் வேற்றுமை **அயஸே** எனவரும். இங்கு அக்னிக்கு விசேஷணம் **அயா:** என்பது. இதற்கு **அயாஸே** என்பது தான் நான்காம் வேற்றுமை ரூபம். **அயஸே** என்பது அல்ல. அவரவர் தம்தமது விருப்பப்படி உச்சரிப்பது. இந்த மந்த்ரத்தில் **க்ருத:** என்பதற்குப் பின்வரும் **அயா** என்பதையும், **அயா நோ** என்பதில் உள்ள **அயா** என்பதையும் விஸர்க்கம் இன்றிச் சொல்ல வேண்டும் என்பது ஹரதத்தர் வ்யாக்யானக்கருத்து. ஸூத்ர மந்த்ரமாதலால் ஏகச்ருதியில் சொல்லலாம். अयाश्च என்பதற்கு, वामदेवः ऋषिः என்பர் சிலர்.

**ப்ரயோக விளக்கம்**

9. (5) **ப்ரஹ்மா செய்ய வேண்டிய ஏழு ஹோமங்கள்:**

முன் கூறிய மந்த்ரங்களுக்கு ரிஷி, தேவதை, சந்தஸ் சொல்லாமல் மந்த்ரங்களை மாத்திரம் சொல்லி, ஸ்ருவத்தினுல் நெய்யை எடுத்து ப்ரஹ்மா ஹோமம் செய்ய வேண்டும்.

**குறிப்பு:**—கர்த்தா ப்ரஹ்மாவைப் பார்த்து, **ப்ரஹ்மன், ஸப்த ஆஹுதீர் ஜுஹுதி**(ஏழு ஹோமங்களைச் செய்யுங்கள் எனவேண்ட)

ப்ரஹ்மா, ஹோஷ்யாமி என்று சொல்லி ஹோமம் செய்வர். ப்ரஹ்மா இந்த ஹோமம் செய்ய, தம் இடத்தை விட்டு அக்னிக்கு வடகிழக்கில் உட்கார்ந்து ஹோமம் செய்யவேண்டும் என க்ருஹ்ய பரிசிஷ்டம் கூறும். "[कर्तारं] परीत्य प्रागुदीच्यां अवस्थाय जुहुयात्" । பக்கம் 212. ப்ரயோக பாரிஜாதம் ப்ரஹ்மா, வடமேற்கில் உட்கார வேண்டும் என்று கூறுகிறது. 'अनन्तरं ब्रह्मा कर्तारं परीत्य वायव्यदेशे स्थित्वा अयाश्चेत्यादिसप्ताहुतीर्जुहुयात्' பக்கம். 65.

ப்ரஹ்மா தாம் முதலில் உட்கார்ந்த இடத்திலிருந்தே ஹோமம் செய்வதும் தற்போது வழக்கத்திலிருக்கிறது.

ப்ரஹ்மா ஹோமம் செய்யும் போது ஒவ்வொரு ஹோமத்திற்கும் ஸ்வாஹா வரை மந்த்ரங்களை அவர் சொல்ல, ந மம என்பதை கர்த்தா சொல்லவேண்டும்.

ப்ரஹ்மா ஹோமம் செய்ய முடியாதவராக இருந்தால் கர்த்தா ப்ரஹ்மன் ஸப்தாஹுதீர் ஹோஷ்யாமி என வேண்ட, ப்ரஹ்மா ஜுஹுதி என அனுமதி தருவர். ப்ரஹ்மா தர்ப்பத்தால் கர்த்தாவை ஸ்பர்சித்துக் கொண்டிருக்க, கர்த்தாவே மந்த்ரங்களைச் சொல்லி ஹோமம் செய்யவேண்டும்.

ப்ரஹ்மா வரிக்கப்படாமல் இருந்தாலும் கர்த்தாவே இவற்றைச் செய்ய வேண்டும். ப்ரஹ்மா செய்ய வேண்டிய கார்யங்களை வரிசைப்படுத்திக் கூறும் நாராயணர் வாக்யத்தைக் கவனிக்க.

निरसनोपवेशने, ब्रह्मजपः, सर्वप्रायश्चित्तानि संस्थाजपश्चेति पञ्च ब्रह्मणो भवन्तीति उक्तम् । तत्र एवं क्रमः —

१. पूर्वं कर्ता सर्वप्रायश्चित्तानि जुहोति ।
२. ततो ब्रह्मा सर्वप्रायश्चित्तानि जुहुयात् ।
३. ततः कर्ता पूर्णपात्रं निनयति ।
४. ततः कर्ता संस्थाजपेनोपतिष्ठते ।
५. ततः ब्रह्मा उपतिष्ठते ।
६. ततः कर्ता परिसमूहनपर्युक्षणे (करोति) ।

अभ्युक्षणं च, (१) आपोऽस्मान्, (२) इदमापः, (३) सुमित्र्या नः इत्येतैः मन्त्रैः ; आश्व. गृह्यव्याख्या. 1-10-24. பக்கம். 41.

## १०. ज्ञाताज्ञातदोषनिर्हरणार्थहोमाः

प्राणानायम्य, ज्ञाताज्ञातदोषनिर्हरणार्थं अनाज्ञातत्रयं होष्यामि । (स्रुवेण सकृद्गृहीतेनाज्येन) ।

**अनाज्ञातं, पुरुषसंमितः** इत्यनयोर्मन्त्रयोः हिरण्यगर्भः ऋषिः त्रिष्टुप् छन्दः । अग्निर्देवता । ज्ञाताज्ञातदोषनिर्हरणार्थे आज्यहोमे विनियोगः—

**अनाज्ञातं यदाज्ञातं यज्ञस्य क्रियते मिथु ।**

**अग्ने तदस्य कल्पय त्वं हि वेत्थ यथातथम् ॥**

[आप. श्रौ. ३. १२. १. ७; तै. ब्रा. ३.७.११]

स्वाहा - अग्नय इदं, न मम ।

**पुरुषसंमितो यज्ञः यज्ञः पुरुषसंमितः ।**

**अग्ने तदस्य कल्पय त्वं हि वेत्थ यथातथम् ॥**

[आप. श्रौत. ३. १२. १. ८; तै. ब्रा. ३. ७. ११.]

स्वाहा - अग्नय इदं, न मम ।

३. **यत्पाकत्रा** इत्यस्य मन्त्रस्य त्रितः ऋषिः। त्रिष्टुप् छन्दः । अग्निर्देवता । ज्ञाताज्ञातदोषनिर्हरणार्थे आज्यहोमे विनियोगः—

**यत्पाकत्रा मनसा दीनदक्षाः न यज्ञस्य मन्वते मर्त्यासः ।**

**अग्निष्टद् होता क्रतुविद् विजानन् यजिष्ठो देवाँ ऋतुशो यजाति ॥**

**[आपस्तम्बश्रौत. सू. ३. १२. १.९; ऋ. १०. २. ५; तै. ब्रा. ३.७.११.]**

स्वाहा—अग्नय इदं, न मम ।

**ப்ரயோக விளக்கம்:**

## (10) ஜ்ஞாதாஜ்ஞாத தோஷ நிர்ஹரணார்த்தஹோமம்

தெரிந்தும் தெரியாமலும் நேர்ந்த தோஷங்களைப் போக்குவதற்கான ஹோமங்கள். இவற்றையும் ஸ்ருவத்தினால் ஒரு தடவை நெய் எடுத்துச் செய்ய வேண்டும். (1) ப்ராணாயாமம் செய்து **ஜ்ஞாத ஜ்ஞாத......ஸ்வாஹா** என்கிற வரை சொல்லி முதல் ஹோமம். (2) **புருஷஸம்மித: .... ஸ்வாஹா** என்கிற வரை சொல்லி இரண்டாவது ஹோமம். (3) **யத் பாகத்ரா** என்று தொடங்கி **ஸ்வாஹா** என்கிற வரையில் சொல்லி மூன்றாவது ஹோமம் செய்ய வேண்டும்.

குறிப்பு:— இந்த மூன்று ஹோமங்களை ஆச்வலாயனரோ, பரிசிஷ்டம் எழுதியவரோ, (பக்கம் 212) காரிகை எழுதியவரோ (பக்கம் 268) சொல்லவில்லை. ஆபஸ்தம்பர் தமது ச்ரௌத ஸூத்ரத்தில் பன்னிரண்டாவது கண்டிகையில் (பக்கம் 111 கிரந்தப் பதிப்பு) முதல் ஸூத்ரத்தில் இந்த மூன்றினையும் 7, 8, 9-ஆவது மந்த்ரங்களாகக் கொடுத்திருக்கிறார். யஜுர்வேதிகள் (ஆபஸ்தம்பிகள்) அக்னி ஸந்தான ஹோமத்தில் இந்த மூன்று ஹோமங்களை இரண்டு முறை செய்கிறார்கள். ரிக்வேதிகளுக்காக, ப்ரயோக பாரிஜாதம் என்ற நூல் எழுதிய ந்ருஸிம்ஹஸூரி என்பவர், ' ततो ब्रह्मा मन्त्रविपर्यासादिनियतनिमित्ते प्राप्ते कारिकोक्त-यद्वो इति मन्त्रेण, यथाचारम् आपस्तम्बकल्पोक्तेनानाज्ञातमिति मन्त्रेण च आज्याहुतीर्जुहुयात् '' (பக்கம் 49-50) என்று கூறுகிறார்.

மந்த்ரத்தில் மாறுதல் முதலான குற்றம் ஏற்படும்போது காரிகை கூறிய **யத் வோ** என்ற மந்த்ர ஹோமத்தையும், அனுஷ்டானத்தில் வந்துள்ள ஆபஸ்தம்பர் கூறிய **அநாஜ்ஞாதம்** என்ற மூன்று ஹோமங்களையும் **ப்ரஹ்மா** செய்யவேண்டுமென்பது இதன் கருத்து.

ஆச்வலாயனர் தமது ச்ரௌதஸூத்ரத்தில் மேற் சொன்ன குற்றங்கள் நீங்க 3-13-18 ஸூத்ரத்தில் (பக்கம் 152) **யத் வோ தேவா:** என்ற மந்த்ரத்தைச் சொல்லி ஹோமம் செய்யச் சொல்லியிருப்பதால், அந்த ஹோமம் ஒன்றே போதுமானது. **அயா: ச** என்று ஏழு ப்ராயசித்த ஹோமங்கள் ஏற்கனவே செய்யப்பட்டுள்ளன. **ஆசாரத்தால் வந்தது** என்ற காரணத்தைக்காட்டி அனாஜ்ஞாத மூன்றுஹோமங்களை செய்யச்சொல்லவேண்டியதில்லை. சிஷ்டர்கள் பலரின் ஆசாரத்திலும் இந்த மூன்று ஹோமங்கள் இல்லாததால் முத்துதீக்ஷிதரும் தமது நூலில் இவற்றைத்தரவில்லை. லகு ஆச்வலாயன ஸ்ம்ருதி இந்த மூன்று ஹோமங்களைச் செய்யச் சொல்லியிருந்தாலும், அதில் சிஷ்டர்கள் ஆதரவு காட்டவில்லை.

अनाज्ञातमिति द्वाभ्यां ज्ञाताज्ञातनिवृत्तये ।
सर्वत्रापि हि चैवं स्यात् विधिरेष उदाहृतः ॥
यत्पाकत्रेति मन्त्रेण......[लघु-आश्वलायनस्मृतिः २.६४.६५.]

ரிக்வேதிகளுக்குத் தேவையில்லாதவைகளும் ப்ரயோகத்தில் நுழைகின்றன என்பதற்கு இதுவும் ஓர் உதாஹரணம். இது தரப்படா விட்டால், குறை ஏற்பட்டு விடலாம் என்று நினைப்பவர்களைக் கருதி இங்கு இவை தரப்பட்டன.

## ११. (१) स्वरवर्णादिविपर्यासप्रायश्चित्तहोमः

ओम्, अस्मिन् विच्छिन्न-औपासन-अग्निसन्धानहोम-कर्मणि मध्येसम्भावितमन्त्रतन्त्रक्रियाकाललोप-स्वर - वर्ण - विधिविर्यास-द्रव्यविपर्यास-न्यूनातिरेकादि-सर्वदोषप्रायश्चित्तार्थं **यद्वो देवाः** इत्येकां आहुतिं होष्यामि ।

**यद्वो देवा** इत्यस्य अभितपाः ऋषिः । त्रिष्टुप् छन्दः । मरुतो देवताः । सर्वाघौघनिर्हरणार्थे प्रायश्चितार्थे आज्यहोमे विनियोगः—

**यद्वो देवा अतिपातयानि वाचा च प्रयुती देवहेळनम् ।**

**अरायो अस्माँ अभिदुच्छुनायते अन्यत्रास्मन्मरुतः तन्निधेतन स्वाहा ॥**

[तै. ब्रा. ३. ७. ११. २; आश्व. श्रौ. सू. ३. १३. १८.]

मरुद्भ्यः इदं, न मम ॥

ओं भूर्भुवस्स्वः स्वाहा—प्रजापतये इदम् , न मम ।

## ११. (२) कर्मसाद्गुण्यहोमः (स्रुवेण)

ओम् कर्मसाद्गुण्यार्थं केशवादिहोमं करिष्ये ॥
ओम् केशवाय स्वाहा — केशवाय इदं न मम ।
ओम् नारायणाय स्वाहा — नारायणाय इदं न मम ।

ओम् माधवाय स्वाहा — माधवाय इदं न मम।
ओम् गोविन्दाय स्वाहा — गोविन्दाय इदं न मम।
ओम् विष्णवे स्वाहा — विष्णवे इदं न मम।
ओम् मधुसूदनाय स्वाहा — मधुसूदनाय इदं न मम।
ओम् त्रिविक्रमाय स्वाहा — त्रिविक्रमाय इदं न मम।
ओम् वामनाय स्वाहा — वामनाय इदं न मम।
ओम् श्रीधराय स्वाहा — श्रीधराय इदं न मम।
ओम् हृषीकेशाय स्वाहा — हृषीकेशाय इदं न मम।
ओम् पद्मनाभाय स्वाहा — पद्मनाभाय इदं न मम।
ओम् दामोदराय स्वाहा — दामोदराय इदं न मम।
ओम् श्रीविष्णवे स्वाहा —श्रीविष्णवे परमात्मने इदं न मम।

**ப்ரயோக விளக்கம்**

11. (1) மந்த்ரங்கள், த்ரவ்யங்கள், அனுஷ்டானங்கள் இவைகளில் ஏற்படும் எல்லா வகையான குற்றங்களும் நீங்க, **யத் வோ தேவா:** என்று தொடங்கி ஸ்வாஹா வரையுள்ள மந்த்ரத்தைச் சொல்லி மருத்துக்கள் என்ற தேவர்களுக்கு ஸ்ருவத்தினுல் ஒரு ஹோமம் செய்யவேண்டும்.

**குறிப்பு:** இந்த ஒரு ஹோமத்தைத்தான் பிராயச்சித்தமாக ஆச்வலாயனர் விதித்தார். கந்தாடை ஸுப்ரஹ்மண்ய சாஸ்திரி என்பவர் தமது ப்ரயோக நூலில் முதலில் யத் வோ தேவா: என்ற ஹோமத்தையும், பிறகு அனுஜ்ஞாத ஹோமங்கள் மூன்றையும் செய்யும்படி சொல்லியிருக்கிறர். ப்ரயோக பாரிஜாத நூலாசிரியர் கூறிய முறையும் இதுதான்.

**ப்ரயோக விளக்கம்:**

11 (2) **கர்மா நல்ல குணம் (பலன்) உடையதாக வேண்டுமென்று கேசவாதி ஹோமம் செய்தல்.**

ஒம் என்று தொடங்கி **விஷ்ணவே ஸ்வாஹா** வரை சொல்லி பதின்மூன்று ஹோமங்கள் செய்யப்படவேண்டும்.

**குறிப்பு:** இந்த பதின்மூன்று ஹோமங்களை ஸூத்ரகாரர் விதிக்கவில்லை. ப்ரயோககாரர்கள் இதைத் தமது நூல்களில்

தரவில்லை. இந்த ஹோமம் செய்வதற்கான ப்ரமாணத்தை ப்ரயோக பாரிஜாதகாரர் ஸ்ம்ருதி சந்த்ரிகை என்ற நூலிலிருந்து காட்டுகிறார்.

**प्रमादात्कुर्वतां कर्मप्रच्यवेताध्वरेषु यत्। स्मरणादेव तद्विष्णोः संपूर्णं स्यादितिश्रुतिः जुहोति जपतीति प्रायश्चित्ते ब्रह्माणम् इति** [பக்கம். 51.]

"யாகத்தில் ஏற்படும் குறை நீங்க விஷ்ணுமந்த்ர ஸ்மரணம், ஜபம், விஷ்ணுமந்த்ரங்களைச் சொல்லி ஹோமம் இவைகளைச் செய்ய வேண்டும்" என்பது இதன் கருத்து.

## १२. अथ पूर्णाहुतिः

**धामन् ते** इत्यस्य वामदेवः ऋषिः। जगती छन्दः। आपो देवताः—पूर्णाहुतिहोमे विनियोगः—

**धामन् ते विश्वं भुवनमधि श्रितम् अन्तः समुद्रे हृद्य१न्तरायुषि।**
**अपामनीके समिथे य आभृतः तमश्याम मधुमन्तं त ऊर्मिम्॥**

स्वाहा - अद्भ्यः इदं, न मम। [ऋ. ४. ५८. ११.]

आज्यं सर्वं हुत्वा - आज्यपात्रं उत्तरतो निधाय, अग्निं परिसमुह्य, पर्युक्ष्य—

**ப்ரயோக விளக்கம்**

### 12. பூர்ணாஹுதி

**தாமன் தே** தொடங்கி **ஸ்வாஹா** வரை சொல்லி, வலது கையில் தர்வி ஸ்ருவம் இரண்டையும் சேர்த்துப் பிடித்துக் கொண்டு, இடது கையில் நெய்ப்பாத்திரத்தை எடுத்து, நெய் முற்றிலும் தர்வியில் விழும்படி செய்து, ஹோமம் செய்யவேண்டும். நெய்தாரை கோது மையின் கனத்தில் இருக்க வேண்டும். ஹோமம் செய்தபின் பாத்ரத்தை வடக்கில் வைக்க. அக்னிக்கு பரிஸமூஹனம் பர்யு க்ஷணம் இரண்டும் செய்ய.

**குறிப்பு**:—ச்ரௌத கர்மாவான **அக்னியாதானத்திற்கு** அங்க மாக, **पूर्णाहुतिं जुहुयात्** என பூர்ணாஹுதி விதிக்கப்பட்டிருக்கிறது.

**पूर्णाहुतिं जुहोति । सर्वं वै पूर्णाहुतिः । सर्वमेवाप्नोति । [तै. ब्रा. ३. ८. १०. ५]** அதை க்ருஹ்யகர்மாவான அக்னிஸந்தானத்தில் கொண்டுவந்திருக்கிருர்கள். யஜமானனுடைய ஸர்வ காமனைகளையும் பூர்த்தி செய்வதால் இது, இப்பெயர்பெற்றது. ஸ் கில் **ர்ணமாக** நெய்விடுவதாலும் இப்பெயர் வந்ததென்பர். பன்னிரண்டுமுறை ஸ்ருவத்தால் நெய் எடுத்து ஸ்ருக்கில் விட்டுச் செய்வதாலும் இதற்கு இப்பெயர் உண்டு. நெய் முழுவதையும் ஹோமம் செய்யாமல் சிறிது மிச்சம் வைத்து அதை ப்ரஹ்மாவிற்கு தக்ஷிணையாகத் தரவேண்டும் என்பர். **कर्मप्रपूरणीं भद्रद्रव्यदां पूर्णाहुतिं जुहुयात्** என்பது **ப்ர. பா.** விளக்கம். பக்கம்.66. வரி. 7. **தாமன் தே** என்ற ரிக்குள்ள ஸூக்தம் முழுவதையும் சொல்லி ஹோமம் செய்ய வேண்டும் என்பர் சிலர்.

**சதபதப்ராஹ்மணம்** பூர்ணாஹுதியை ப்ராயச்சித்த ஆஹுதியாகச் சொல்கிறது.

**यस्य धर्मो विदीयते तत्र प्रायश्चित्तिः । पूर्णाहुतिं जुहोति । अद्भ्यः स्वाहेति । आपो वै सर्वेषां देवानामायतनम् । तत्सर्वाभिरेव देवताभिः भिषज्यति यत् किञ्च विवृढं(न्यूनं) यज्ञस्य । [श. ब्रा. १४. ३. २. १३]**

## १३. पूर्णपात्रनिनयनं प्रोक्षणं च

वरुणाय नमः—सकलाराधनैस्स्वर्चितम् - इति अक्षतान् विकीर्य, वरुणपात्रमादाय, पुरतो बर्हिषि निधाय, अभिमृशन्—(पात्रं स्पृशन्)—

**१. पूर्णमसि पूर्णं मे भूयाः ।**

**२. सुपूर्णमसि सुपूर्णं मे भूयाः ।**

**३. सदसि सन्मे भूयाः ।**

**४. सर्वमसि सर्वं मे भूयाः ।**

**५. अक्षितिरसि मा मे क्षेष्ठाः । [आश्व. श्रौ. सूत्रमन्त्रः १.११.६.]**

इत्यभिमन्त्र्य (जपित्वा)—

१. प्राच्यां दिशि देवाः ऋत्विजो मार्जयन्ताम् ।
२. दक्षिणस्यां दिशि मासाः पितरो मार्जयन्ताम् ।
३. प्रतीच्यां दिशि गृहाः पशवो मार्जयन्ताम् ।
४. उदीच्यां दिशि आपः ओषधयो वनस्पतयो मार्जयन्ताम् ।
५. ऊर्ध्वायां दिशि यज्ञः संवत्सरः प्रजापतिः मार्जयतां मार्जयन्तां इति वा । [आश्व. श्रौ. सू. १. ११. ७.]

इति पञ्चसु दिक्षु कुशाग्रैः यथाक्रमं जलं निनीय, वामभागस्थितपत्न्यञ्जलौ बर्हिः निधाय, एतान् (वक्ष्यमाणान्) मन्त्रान् कथयन् पूर्णपात्रावशिष्टं जलं निनयेत् ।

१. माऽहं प्रजां परासिचम् या नः सयावरी(ः) स्थन ।
समुद्रे वो निनयानि स्वं पाथो अपीथ ॥
[आश्व. श्रौ. सू. मन्त्रः १. ११. ८. पृ. ३४. ६. १२. ११.]

२. आपो अस्मान् मातरः शुन्धयन्तु घृतेन नो घृतप्वः पुनन्तु ।
विश्वं हि रिप्रं प्रवहन्ति देवीः उदिदाभ्यः शुचिरा पूत एमि ॥
[ऋ. १०. १७. १०.]

३. इदमापः प्र वहत यत्किं च दुरितं मयि ।
यद्वाहमभि दुद्रोह यद्वा शेप उतानृतम् ॥ [ऋ.१.२३.२२.]

४. सुमित्र्या न आपः ओषधयस्सन्तु । दुर्मित्र्याः तस्मै सन्तु ।
योऽस्मान् द्वेष्टि, यं च वयं द्विष्मः ॥
[आश्व. श्रौ. सू. मन्त्रः ३. ५. २. पृ. १२१.]

इति । सा तत् तीर्थं भूमौ निषिञ्चेत् । भूमौ निनीतेन जलेन कर्ता आत्मानं पत्नीं परिवारांश्च शिरसि प्रोक्षेत् ॥

**ப்ரயோக விளக்கம்**

**13. பூர்ணபாத்ர ஜலத்தை தர்ப்பத்தின்மேல் சேர்த்தலும் ப்ரோக்ஷித்தலும்.**

**வருணாய நம: ஸகலாராதனை: ஸ்வர்ச்சிதம்** என்று பூர்ண பாத்ரத்தில் அக்ஷதை சேர்த்து, கர்த்தா தன் எதிரில் தர்ப்பத்தின் மேல் வைத்து, பாத்ரத்தை வலது கையால் ஸ்பர்சித்துக் கொண்டு **பூர்ணமஸி** என்று **மா மே க்ஷேஷ்டா:** என்கிறவரை சொல்லி அபிமந்த்ரிக்கவேண்டும். இந்த மந்த்ரங்களைச் சொல்லி பூர்ண பாத்ரத்தில் தீர்த்தம் சேர்க்கவேண்டும் என்று சிலர் சொல்வதற்கு ஆதாரம் காணப்படவில்லை.

பிறகு, **ப்ராச்யாம் திசி** என்று ஐந்து மந்த்ரங்களைச் சொல்லி ஒவ்வொரு திசையிலும் ஜலத்தை எடுத்து தர்ப்பத்தின் மேல்விட்டு, பாத்ரத்தில் மிஞ்சியுள்ள ஜலத்தைக் கர்த்தா தனக்கு இடது பக்கத்தில் இருக்கும் பத்னியின் கையில் தர்ப்பத்தைவைத்து, (1) **மாஹம்** (2) **ஆப: அஸ்மான்** (3) **இதமாப:** (4) **ஸுமித்ர்யா:** என்ற நான்கு ரிக்குகளையும் சொல்லி, விடவேண்டும். பத்னி அந்த தீர்த்தத்தை கீழேவிட, தரையில் விடப்பட்ட தீர்த்தத்தைத் தொட்டு கர்த்தா தன் சிரஸ்ஸிலும் பத்னியின் சிரஸ்ஸிலும் ப்ரோக்ஷிக்கவேண்டும்.

**குறிப்பு:—बर्हिषि पूर्णपात्रं निनयेत् । एषोऽवभृथः** [१.१० २३-२४] என்று, பூர்ணபாத்ரத்தை அவப்ருதமாக ஆச்வலாயனர் குறிப்பிடுவதால் அவப்ருதஸ்நானத்திலும் ப்ரோக்ஷணத்திலும் விதித்துள்ள **ஆபோ அஸ்மான், இதமாப:, ஸுமித்ர்யா:** என்ற மூன்று ரிக்குகளையும் ப்ரயோக காரர்கள் ப்ரோக்ஷணத்திற்காகச் சேர்த்திருக்கின்றனர்.

**तत आचम्य आप्लवन्तः, आपो अस्मान् मातरः शुन्धयन्तु, इदमापः प्रवहत, सुमित्र्या न आप ओषधयः सन्त्विति ॥** [आश्व. श्रौ. सू. ६. १३-१५ பக்கம். 277.]

பூர்ண பாத்ர தீர்த்தத்தை **மா ஹம் ப்ரஜாம்** என்ற மந்த்ரத்தைச் சொல்லி பத்னி கையில் சேர்க்கவேண்டும் என்பதை ச்ரௌதத்தில் சொல்லியிருக்கிறார். ஸூத்ரம்:—

**अथास्याः उत्तानमञ्जलिमधस्ताद्योक्त्रस्य निधाय आत्मनश्च सव्यम्, पूर्णपात्रं निनयन्वाचयेत्, मा हं प्रजां परासिचं या नः सयावरी स्थन । समुद्रे वो निनयानि स्वं पाथो अपीथेति (१.११.८.** பக்கம். 34.)

இரண்டு ஸூத்ரங்களில் கொடுத்த மந்த்ரங்களும் ப்ரோக்ஷணத்தில் உபயோகிக்கப்படுகின்றன. **माहं प्रजां** என்பதை, **பரிசிஷ்டமும்** நாராயண வ்யாக்யானமும் தரவில்லை. இந்த நான்கு மந்த்ரங்களைச் சொல்லும் வரிசையையும் சிலர் மாற்றியிருக்கிறார்கள். **மா ஹம்** என்பதை ப்ரயோகபாரிஜாதமும் வேறு சிலரும் முடிவில் சொல்கிறார்கள். **காரிகை** சொன்ன வரிசையில் இங்கு மந்த்ரங்கள் தரப்பட்டுள்ளன.

"**अवभृथरूपं पापक्षयकरं पूर्णपात्रजलमार्जनं कुर्यात्- प्र-पा** [பக்கம். 66. வரி, 25 ] என விளக்குகிறது. **सयावरीः** என விஸர்க்கத்துடனும் பாடம் காணப்படுகிறது.

## १४. ब्रह्मोद्वासनम्

ब्रह्मन्, वरं ते ददामि । ब्रह्मणे नमः । सकलाराधनैः स्वर्चितम्—इति अक्षतान् समर्प्य तांबूलं दक्षिणां च दद्यात् ॥

**ப்ரயோக விளக்கம்**

### 14 ப்ரஹ்மோத்வாஸனம்

**ப்ரஹ்மன்** என்று தொடங்கி **ஸ்வர்ச்சிதம்** வரை சொல்லி, ப்ரஹ்மாவிற்கு அக்ஷதை சேர்த்து, தாம்பூலம் தக்ஷிணை தரவும்.

**குறிப்பு** :—ஔபாஸனத்தில் ப்ரஹ்மா தேவையில்லாததால் அவரை உத்வாஸனம் செய்துவிட வேண்டும். உபஸ்தான மந்த்ரமான **ஓம் ச மே** என்பதைக் கர்த்தா சொன்னவுடன், ப்ரஹ்மாவும் சொல்லவேண்டும். இதற்கு **ஸம்ஸதாஜபம்** எனப் பெயர். அவரது ஐந்தாவது கடமையான இதை அவர் செய்யாமலிருக்கும் போதே உத்வாஸனம் செய்வது அனுஷ்டானத்தில் இருக்கிறது. உபஸ்தானம் ஔபாஸன முடிவில் செய்யப்படுகிறது.

அக்னி ஸந்தான அங்கமாக உபஸ்தானத்தை ப்ரயோக பாரிஜாதகாரர் கூறியிருக்கிறார்.

**अथाग्निं,ओञ्च मे इति संस्थाजपेनोपतिष्ठते । ततो ब्रह्मा च । अथ कर्ता अग्नेः परिसमूहन-पर्युक्षणे कुर्यात् । एतदेवान्येषु स्थालीपाकवत्सु कर्मस्विति [ப்ர: பா. பக்கம்.** 52, வரி. 7-8].

**அவர் கருத்து :** ச்ரௌதத்திலுள்ள அக்னி ஆதானம் போல் க்ருஹ்யமான அக்னிஸந்தானமும் ப்ரதான கர்மாவாக உள்ளது. இதற்குப் பலன் அக்னி ஸித்தி. ஸித்தமான அக்னியில் ஔபாஸன ஸ்தாலீபாகாதிகளின் ஹோமங்கள் செய்யப்படுகின்றன. அக்னி ஸித்திக்கு அதன் கடைசி அங்கமாக, கர்த்தா செய்யும் உபஸ்தானம், ப்ரஹ்மா செய்யும் ஸம்ஸ்தா ஜபம் என இவ்விரண்டும் செய்து முடிக்கப்பட வேண்டும். இது காரணமாகவே ப்ரயோகபாரிஜாத காரர் அக்னிஸந்தான உபஸ்தானத்திற்கு வேறு மந்த்ரங்களையும், ஔபாஸன உபஸ்தானங்களுக்கு வேறு மந்த்ரங்களையும் கொடுத்திருக்கிறார். **ஓம் ச மே** என்பது அக்னிஸந்தான உபஸ்தானத்திற்கு மாத்ரமே தரப்பட்டுள்ளது. அவருடைய அபிப்ராயம் சரியானதெனப் புலப்படுகிறது. சிஷ்டர்கள் இதைப்பற்றி விமர்சித்து தீர்மானிக்கலாம். க்ருஹஸ்தர்கள் தம் தமது வழக்கத்தையும் பின் பற்றலாம்.

தற்போது, அக்னியுபஸ்தானம், ஔபாஸன உபஸ்தானம் இரண்டையும் சேர்த்து ஔபாஸன முடிவில் செய்கிறார்கள். மந்த்ரங்களிலும் வேறுபாடு இல்லை. இம்முறையைப் பின்பற்றியே இங்கு ப்ரயோகம் தரப்பட்டுள்ளது.

ஔபாஸனத்தின் முடிவில் ஸம்ஸ்தா ஜபம் செய்த பிறகு ப்ரஹ்மோத்வாஸனம் செய்யலாம் என்பது சில சிஷ்டர்களின் அபிப்ராயம்.

ப்ர. பாரிஜாதம் கொடுத்துள்ள உபஸ்தான மந்த்ரங்களின் ப்ரதீகங்கள் மாத்ரம் தரப்படுகின்றன:—

(अ) அக்னிஸந்தானோபஸ்தானமந்த்ரங்கள். (१) अग्ने त्वं नो अन्तमः (२) स नो बोधि. [५.२४.१-२] (३) ओं च मे [आ.श्रौ.सू.१.११.१५] [ப்ர. பா. பக்கம். 67.]

(आ) காலை ஔபாஸன உபஸ்தானமந்த்ரங்கள்: (१) सूर्यो नो दिवः [ऋ. १०. १५८. १] (२) उदुत्यम् [ऋ. १. ५०. १] (३) चित्रं देवानां [ऋ. १. ११५. १] (४) नमो मित्रस्य [ऋ. १०. ३७. १] प्रजापते नत्वेतानि [ऋ. १०. १२१. १०.] ப்ர. பா. பக்கம். 405.

(इ) ஸாயம் ஔபாஸனஉபஸ்தானமந்த்ரங்கள் : (१) अग्न आयूंषि पवसे ऋक्त्रयम् , [ऋ. ९. ६६. १९. २१] (२) अग्ने त्वं नः [ऋ. ५. २४. १-२] (३) प्रजापते [ऋ. १०. १२१. १०.] ப்ர பா. பக்கம். 405.

## १५. अथ औपासनम्

### (१) औपासन - अकरण प्रायश्चित्तार्थदानम् ।

प्राणानायम्य । शुक्लाम्बर ..... प्रीत्यर्थं अनेककालं सायंप्रातरौपासन-अकरण प्रायश्चित्तार्थं प्राजापत्यकृच्छ्रप्रत्याम्नायं यत्किञ्चित् हिरण्यदानं होमद्रव्यतण्डुलदानं च करिष्ये इति सङ्कल्प्य – सताम्बूलं हिरण्यं तण्डुलद्रव्यं चादाय–

हिरण्यगर्भगर्भस्थं हेमबीजं विभावसोः ।
अनन्तपुण्यफलदमतः शान्तिं प्रयच्छ मे ॥
तण्डुला वैश्वदेवत्याः पाकेनान्नं पचन्ति ये ।
तस्मात् तण्डुलदानेन अतः शान्तिं प्रयच्छ मे ॥

अनेककालं सायंप्रातरौपासनाकरणप्रायश्चित्तार्थं प्राजापत्यकृच्छ्रप्रत्याम्नायं यत्किञ्चित् हिरण्यं होमद्रव्यं च यस्मै कस्मैचित् श्रोत्रियाय ब्राह्मणाय - श्रीवैष्णवाय अथवा तुभ्यमहं सम्प्रददे (नमः) न मम इति कस्मैचित् ब्राह्मणाय दद्यात् ॥

**ப்ரயோக விளக்கம்**

**15. (1) அனேககாலம் ஔபாஸனம் செய்யாமைக்கான ப்ராயச்சித்தம்**

ப்ராணாயாமம் செய்து, **சுக்லாம்பர**...என்று தொடங்கி **கரிஷ்யே** என்கிறவரை சொல்லி ஸங்கல்பம் செய்து தக்ஷிணையையும் அரிசியையும் எடுத்துக் கொண்டு **ஹிரண்ய - ந மம**வரை சொல்லி, ஒரு ஸ்வாமிக்குக் கொடுத்து விடவும். தக்ஷிணையை ஒருவருக்கும், அரிசியை வேறு ஒருவருக்கும் தரலாம்.

**குறிப்பு** : **अतः शान्तिं** என்பதற்குப் பதிலாக **अदः शान्तिं** என்பதாகவும் சொல்லுகிறார்கள். **अतः** என்பது **ப்ர. பா.** பாடம்; பக்கம் (ஏடு) 78. வரி. 22.

## १५. (२) औपासनहोमः

प्राणानायम्य, ....... प्रीत्यर्थं पूर्वेद्युः (कर्तव्येन) सायमौपासनेन सह अद्यप्रातरौपासनं व्रीहिभिः तण्डुलैर्वा तन्त्रेण होष्यामि इति संकल्प्य सात्त्विकत्यागं कृत्वा- अप उपस्पृश्य—

तदङ्गमन्वाधानं करिष्ये। समिद्द्वयमादाय पूर्वेद्युः सायमैपासनदेवते अग्निं प्रजापतिम्, अद्यप्रातरौपसनदेवते सूर्यं प्रजापतिं च तण्डुलद्रव्येण यक्ष्ये–(प्रजापतिं मनसि ध्यात्त्वा)

स्वाहा – प्रजापतये इदम् (एकां समिधमाधाय)
स्वाहा – प्रजापतये इदम् (अपरां समिधमाधाय)

अग्निं त्रिः परिसमुह्य - परिस्तीर्य, त्रिः पर्युक्ष्य–

पत्नीहस्ताञ्जलिं 'भूर्भुवः स्वः' इति त्रिः प्रोक्ष्य, जलेनाद्रीकृतं तण्डुलं दत्त्वा, होमद्रव्यं ज्वलता दर्भेण अवज्वाल्य गायत्र्या प्रोक्ष्य, तेनैव ज्वलता दर्भेण त्रिः पर्यग्निं कृत्वा, उल्मुकं निर्ऋत्यां निरस्य अथवा अग्नौ प्रास्य– अपः उपस्पृश्य—

विश्वानि नो दुर्गहा जातवेदः सिन्धुं न नावा दुरितातिपर्षि।
अग्ने अत्रिवन्नमसा गृणानः अस्माकं बोध्यविता तनूनाम् ॥
यस्त्वा हृदा कीरिणा मन्यमानोऽमर्त्यं मर्त्यो जोहवीमि।
जातवेदो यशो अस्मासु धेहि प्रजाभिरग्ने अमृतत्वमश्याम् ॥
यस्मै त्वं सुकृते जातवेद उ लोकमग्ने कृणवः स्योनम्।
अश्विनं स पुत्रिणं वीरवन्तं गोमन्तं रयिं नशते स्वस्ति ॥

इति अग्निमलङ्कृत्य– [ऋ. ५. ४. ९-११]

होष्यामि इति उक्त्वा—

तूष्णीं एकां समिधं अग्नौ आधाय - स्वाहा - प्रजापतये इदं, इति मनसि ध्यात्वा–

अथ आदीप्तायां समिधि, पत्नीहस्तात् अर्धांशं होमद्रव्यं स्वहस्ते आदाय, द्वेधा विभज्य एकं भागमादाय—

**सायमाहुतिद्वयम्**—

अग्नये स्वाहा - अग्नय इदं, न मम इति (अग्निमध्ये) अथ अपरं भागमादाय—

प्रजापतये स्वाहा - प्रजापतये इदम्, न मम इति असंसृष्टं अग्नेः ऐशानभागे च पाणितलपार्श्वेन जुहुयात् ।

अथ पत्नीहस्तात् अवशिष्टमर्धांशं आदाय द्वेधा विभज्य एकं भागमादाय—

**प्रातराहुतिद्वयम्**—

सूर्याय स्वाहा - सूर्याय इदं, न मम इति (अग्निमध्ये) प्रजापतये स्वाहा - प्रजापतये इदं, न मम इति (ऐशानभागे) च हुत्वा, **त्रिः** परिसमुह्य, **त्रिः** पर्युक्ष्य—

## १५ (३) आहुतिसंसर्गप्रायश्चित्तहोमः

आहुतिसंसर्गे सति, आहुतिसंसर्गप्रायश्चित्तार्थं वनस्पतिहोमं करिष्ये इति संकल्प्य—

**यत्र वेत्थ** इत्यस्य विश्वामित्रः ऋषिः । गायत्रीच्छन्दः । वनस्पतिर्देवता । आहुतिसंसर्गप्रायश्चित्तार्थे होमे विनियोगः—

होष्यामि इति उक्त्वा—

तूष्णीं एकां समिधं अग्नौ आधाय - स्वाहा - प्रजापतये इदं, इति मनसि ध्यात्वा—

अथ आदीप्तायां समिधि, पत्नीहस्तात् अर्धांशं होमद्रव्यं स्वहस्ते आदाय, द्वेधा विभज्य एकं भागमादाय—

**सायमाहुतिद्वयम्**—

अग्नये स्वाहा - अग्नय इदं, न मम इति (अग्निमध्ये) अथ अपरं भागमादाय—

प्रजापतये स्वाहा - प्रजापतये इदम्, न मम इति असंसृष्टं अग्नेः ऐशानभागे च पाणितलपार्श्वेन जुहुयात् ।

अथ पत्नीहस्तात् अवशिष्टमर्धांशं आदाय द्वेधा विभज्य एकं भागमादाय—

**प्रातराहुतिद्वयम्**—

सूर्याय स्वाहा - सूर्याय इदं, न मम इति (अग्निमध्ये)
प्रजापतये स्वाहा - प्रजापतये इदं, न मम इति (ऐशानभागे)
च हुत्वा, **त्रिः** परिसमुह्य, **त्रिः** पर्युक्ष्य—

## १५ (३) आहुतिसंसर्गप्रायश्चित्तहोमः

आहुतिसंसर्गे सति, आहुतिसंसर्गप्रायश्चित्तार्थं वनस्पतिहोमं करिष्ये इति संकल्प्य—

**यत्र वेत्थ** इत्यस्य विश्वामित्रः ऋषिः । गायत्रीच्छन्दः । वनस्पतिर्देवता । आहुतिसंसर्गप्रायश्चित्तार्थे होमे विनियोगः—

**यत्र वेत्थ वनस्पते देवानां गुह्या नामानि ।**

**तत्र हव्यानि गामय ॥** [ऋ. ५. ५. १०.]

स्वाहा - वनस्पतये इदं, न मम इति एकां समिधमग्नौ निधाय–

एकां समिधं दर्भद्वयं वा आदाय श्रीविष्णवे स्वाहा-श्रीविष्णवे परमात्मने इदं, न मम इति अग्नौ निधाय—

परिस्तरणं प्रागादि आदायोत्तरतो विसृज्य, त्रिः परिसमुह्य, त्रिः पर्युक्ष्य—

### १५. (४) अग्न्युपस्थानम् (संस्थाजपः)

ओम्, अग्न्युपस्थानं करिष्ये–

**ओश्च मे** इत्यस्य सारस्वतः ऋषिः । त्रिष्टुप् छन्दः । अग्निः देवता । अग्न्युपस्थाने विनियोगः—

**१. ओं च मे स्वरश्च मे यज्ञोप च ते नमश्च ।**
**यत् ते न्यूनं तस्मै ते उप ; यत्ते अतिरिक्तं तस्मै ते नमः ॥**
[**आश्व. श्रौ. सू. १. ११. १५.**]

**२. अग्ने नय सुपथा राये अस्मान् विश्वानि देव वयुनानि विद्वान् ।**

**युयोध्य१स्मज्जुहुराणमेनः भूयिष्ठां ते नम उक्तिं विधेम ॥**

[**ऋ. १. १८९. १**]

३. मन्त्रहीनं क्रियाहीनं भक्तिहीनं हुताशन ।
यद्धुतं तु मया देव परिपूर्णं तदस्तु ते ॥

४. प्रायश्चित्तान्यशेषाणि तपःकर्मात्मकानि वै ।
यानि तेषामशेषाणां कृष्णानुस्मरणं परम् ॥
[विष्णुपुराणम्, २. ६. ३७]

इति प्रणम्य, अभिवाद्य, पवित्रं कर्णे निधाय आचम्य, पवित्र-ग्रन्थिं विस्रस्य विसृज्य सात्त्विकत्यागं कुर्यात् ॥

**पुनस्सन्धानविधिः औपासनविधिश्च समाप्तौ ॥**

**ப்ரயோக விளக்கம்**

**15. (2) ஔபாஸனஹோமம்**

ஸங்கல்பம் **அன்வாதானம்** இரண்டையும் செய்து, பரிஸமூஹனம் முதலியவை முடித்து, பத்னியின் கையை ப்ரோக்ஷித்து ஜலத்தில் சிறிது நனைத்த அரிசியைக் கொடுத்து, அவத்யோதனம் முதலியவை செய்த பின்—

**விச்வானி** என்று தொடங்கும் இரண்டு ரிக்குகளால் அக்னிக்கு அலங்கரணம் செய்து, **யஸ்மை** என்பதால் அக்னியை த்யானித்து, **ஹோஷ்யாமி** என்று சொல்லி ஒரு ஸமித்தை **ப்ரஜாபதயே** என்ற பதத்தை மனத்தில் நினைத்துக் கொண்டு வைத்தபின், பத்னி கையிலிருக்கும் அரிசியில் பாதியை வாங்கி இரண்டாகப் பகுத்து ஒரு பகுதியை வலது கையால் **அக்னயே ஸ்வாஹா** என்று அக்னிக்கும், மற்றொரு பகுதியை **ப்ரஜாபதயே ஸ்வாஹா** என்று ப்ரஜாபதிக்கும் ஸாயங்கால ஆஹுதிகளாகச் செய்து, பிறகு பத்னிகையிலுள்ள பகுதியை வாங்கி இரு பகுதியாக்கி **ஸூர்யாய ஸ்வாஹா, ப்ரஜாபதயே ஸ்வாஹா** என்று காலை ஹோமம் இரண்டையும் செய்க.

**குறிப்பு** : ஹோமத்ரவ்ய ஸம்ஸ்காரங்களான அவத்யோதனம் முதலியன மந்த்ரமில்லாமல் செய்யப் படவேண்டும் என்பர் நாராயணர். **"अग्निं परिसमुह्य परिस्तीर्य पर्युक्ष्य होमद्रव्यस्याग्निहोत्रवत् तूष्णीं संस्कारं कृत्वा" नारायणव्याख्या** 1.9.8 பக்கம். 34.

அரிசியைப் பத்னியின்கையில் கொடுத்து வாங்க ப்ரமாணம் இல்லை. சில சிஷ்டர்களின் அனுஷ்டானத்தில் இது உள்ளதால் தரப்பட்டது.

அக்னி ஸூர்யன் இவர்களுக்கான ஹோமத்தை அக்னிமத்தியிலும், ப்ரஜாபதிக்கான ஹோமத்தை அக்னிக்கு வட கிழக்குப் பகுதியிலும் செய்யவேண்டும்.

ப்ரஜாபதிக்கு ஹோமம் செய்யும் அரிசி, அக்னிக்கோ ஸூர்ய னுக்கோ ஆஹுதி செய்த அரிசியின் அளவைவிடச்சிறிது அதிகமாக வும் இருக்கவேண்டும் என்பர்.

இப்படி ஹோமம் செய்யப்பட்ட இரண்டு ஆஹுதிகளும் ஒன்றை ஒன்று ஸ்பர்சிக்கக் கூடாது.

**ப்ரயோக விளக்கம்**

15. (3) **ஆஹுதி ஸம்ஸர்க்க ப்ராயச்சித்தஹோமம்**

ஹோமம் செய்த அரிசி (ஆஹுதி) கலந்து விட்டால், **யத்ர வேத்த வனஸ்பதே** என்ற மந்த்ரத்தைச் சொல்லி ஆஹுதி ஸம் ஸர்க்க ப்ராயச்சித்தமாக ஒரு ஸமித்தை அக்னியில் வைக்க வேண்டும்.

**குறிப்பு :** ஒரு தேவதைக்கு கொடுத்த பொருள் மற்றொருதேவ தைக்குக் கொடுத்த பொருளுடன் சேர்ந்து விடக்கூடாது. ஸம் ஸர்க்கம்-கலத்தல், சேருதல். சேர்ந்து விட்டால் அதற்காக விதிக்கப் பட்ட ப்ராயச்சித்தத்திற்கு **ஆஹுதிஸம்ஸர்க்க ப்ராயச்சித்தம்** எனப் பெயர். இது ச்ரௌதத்திலிருந்து **அதிதேசம்** செய்யப்பட்டது. **அதி தேசம்**—ஒரு இடத்தில் விதித்ததை மற்றொரு இடத்திற்குக் கொண்டு வருதல். **"यत्र वेत्थ वनस्पते इति उत्तरस्याः आहुतेः [आ. श्रौ. सू. ३. ११. २३ पृ. १४१] समिदाधानम् इति शेषः" इति व्याख्या।** ஆஹுதி ஸம்ஸர்க்கம் இல்லாமல் இருக்க அரிசியின்மேல் உமியைத் தூவுவர் சிலர். சிலர் இரண்டு தர்ப்பங்களை வைப்பர். ஆஹுதி ஸம்ஸர்க்கம் நிச்சயமாக இல்லை என்றால் இந்த ஹோமம் செய்ய வேண்டாம்.

**ப்ரயோக** விளக்கம்

15. (4) **அக்னி உபஸ்தானம்**

அக்னிக்குச் சுற்றிலும் போட்ட பரிஸ்தரணத்தை எடுத்து வடக் கில் போட்டு, பரிஸமூஹனம் பர்யுக்ஷணம் செய்து **உபஸ்தானம் கரிஷ்யே** என்று சொல்லி, **ஓம் ச மே, அக்னே நய, மந்த்ரஹீனம், ப்ராயச்சித்தானி** என்ற நான்கினையும் சொல்லி முடித்து அக்னியை நமஸ்கரித்து அபிவாதனம் செய்து பவித்ரத்தின் முடிச்சை அவிழ்த்து சுத்தமான இடத்தில் போட்டு விட்டு, ஆசமனம் செய்து ஸாத்விக த்யாகம் செய்ய வேண்டும்.

**குறிப்பு :** **ஓம் ச மே** என்ற ஒன்று தான் உபஸ்தான மந்த்ரம். ஸூத்ரமந்த்ரமாதலால் ஸ்வரம் தேவையில்லை. **அக்னே நய** என்ற

ரிக்கை சிஷ்டர்கள் சேர்த்திருக்கிறார்கள். கடைசியிலுள்ள இரண்டு சுலோகங்களும் எல்லா ஹோமங்களின் முடிவிலும் சொல்லப்படுபவை. **சிலர் அக்னே த்வம் பாரய** என்ற ரிக்கையும் சொல்கின்றனர்.

**ऐशानदेशे...प्रजापतिपदं चतुर्थ्यन्तं मनसा ध्यायन् स्वाहेत्युच्चार्य-संसृष्टां हुत्वा पूर्ववदुपविश्य, परिस्तरणं विसृज्य, परिसमूहनपर्युक्षणे कृत्वा उपस्थानं कुर्यात् । उपविश्य न्यूनातिरिक्ताच्छिद्रत्वार्थं श्रीविष्णुस्मरणं कृत्वा अनेन-होमेन भगवान् श्रीपरमेश्वरः प्रीयतामित्युच्चार्याचम्य धृतपवित्रग्रन्थिं विस्रस्य शुद्धदेशे क्षिपेत् ॥** ப்ர. பா. பக்கம். 405.

மேலே தந்துள்ள ப்ர. பாரி. வாக்யம் உபஸ்தானம் முதலியவை செய்ய வேண்டிய முறையைக் கூறுகின்றது.

**புனஸ் ஸந்தானம் ஔபாஸனம் இவற்றின் முறைகளுடைய விளக்கம் முற்றும்.**

# 11. ரிக்வேதிகளின் ச்ராத்த க்ரமம்

பித்ருக்களை உத்தேசித்து, மிகவும் ச்ரத்தையுடன் செய்யப்படும் சிறப்பான ஒருவகை கர்மாவிற்கு **ச்ராத்தம்** எனப்பெயர். **ச்ரத்தை** இதில் முக்யமானதால் அது காரணமாக, **ச்ராத்தம்** எனப்பெயர் பெற்றது இதில் ஹோமம், ப்ராஹ்மணபோஜனம், பிண்டதானம் என்ற மூன்றும் மிக முக்யமானவை. ச்ராத்தத்தின் முழு ஸ்வரூபத்தையும் நன்கு தெரிந்து கொள்வதற்காக, இங்கு அது நான்கு பகுதிகளாகப் பகுத்துக் காட்டப்பட்டுள்ளது.

**முதற்பகுதி**:—

1. ப்ராஹ்மணர்களை ச்ராத்தத்தில் எழுந்தருளி இருக்கும்படி கர்த்தா முதலில் ப்ரார்த்தித்தல். இது முதல் பிரார்த்தனை.

2. கர்த்தா, ச்ராத்தம் செய்வதற்கு உரிய யோக்யதையைத் தனக்கு அருளும்படி ப்ராஹ்மணர்களை வேண்டுதல்.

3. ச்ராத்தம் செய்வதற்கான ஸங்கல்பம் செய்தல்.

4. அன்வாதானம், பாத்ரங்களை (உபகரணங்களை) வைத்தல், அவைகளுக்கு ஸம்ஸ்காரம் செய்தல், சருவை ஸித்தம் செய்தல், ஔபாஸன அக்னியிலிருந்து **அதிப்ரணீதம்** என்ற அக்னியை ஏற்படுத்துதல். இத்ம ஹோமம் செய்தல்.

5. ப்ராஹ்மணர்களை மறுபடியும் (இரண்டாம் முறையாக) வரித்தல் (வேண்டுதல்).

6. ப்ராஹ்மணர்களுக்கு பாத ப்ரக்ஷாளனம் செய்து உபசரித்தல்.
என்ற இவை ஆறும் இப்பகுதியில் செய்யப்படுவன ஆகும்.

**இரண்டாம் பகுதி:—**

7. ப்ராஹ்மணர்களை மூன்றும் முறையாக பிரார்த்தித்து விச்வேதேவர், பித்ருக்கள், விஷ்ணு இவர்களை ப்ராஹ்மணர்களிடம் ஆவாஹனம் செய்தல்.

8. ஆவாஹிதர்களான விச்வேதேவாதியருக்குத் தரவேண்டிய உபசாரமான அர்க்ய தீர்த்தத்தை ஸித்தம் செய்தல்.

9. அவர்களுக்கு அர்க்யம் தருதல்.

10. விச்வேதேவர் முதலியவர்களுக்கு சந்தனம், புஷ்பம், தூபம், தீபம்,வஸ்த்ரம் என்ற ஐந்து உபசாரப் பொருட்களைத் தருதல்.

11. பித்ரு தேவதைகளை உத்தேசித்து அக்னியில் அன்ன ஹோமம் செய்தல்.

என்ற இவ்வைந்தும் இப்பகுதியில் செய்யப்படுவன ஆகும்.

**மூன்றும் பகுதி:—**

12. ப்ராஹ்மணர்களை போஜன ஸ்தலத்தில் எழுந்தருளச் செய்தல்.

13. அன்ன பரிவேஷணமும் அன்ன ஸூக்த ஜபமும் செய்தல்.

14. ஹோமம் செய்தபின் மிகுதியுள்ள அன்னத்திலிருந்து எடுத்துச் சிறிது அன்னத்தை பித்ரு ப்ராஹ்மணரிடம் ஸமர்ப்பித்தல்.

15. போஜ்ய பதார்த்தங்களின். பரிவேஷணமும், பரிஷேசனமும், அன்னம் முதலியவற்றைத் **தத்தம்** (தானம்) செய்தலும்.

16. விச்வேதேவாதி ரூபத்திலுள்ள பகவானுக்கு **தத்தம்** (தானம்) செய்தல். (ஸமஷ்டிதானம்).

17. ப்ராஹ்மணர்களுக்கு பரிஷேசனம் செய்வித்து, போஜனம் செய்யும்படி பிரார்த்தித்தல். போஜனத்தின் முடிவில் **க வா உ தேவா:** என்று தொடங்கும் ஸூக்தத்தை ஜபம் செய்தல்.

18. த்ருப்தி ப்ரச்னம், விகிரதானம், வாயஸ பிண்ட தானம் செய்தல், உத்தராபோசனம் தருதல்.
என்ற இவை ஏழும் இப்பகுதியில் செய்யப்படுவன ஆகும்.

**நான்காம் பகுதி:—**

19. பித்ருக்களுக்கு ச்ராத்த அங்கமாக பிண்டதானம் செய்தல்.

20. பிண்ட பித்ருக்களுக்கு எண்ணெய், மை, வஸ்த்ரம் கட்டில், தலையணை என்ற உபசாரங்களைக் கொடுத்து உபசரித்தல்.

21. பித்ருக்களுக்கு உபஸ்தானம் செய்து, பித்ருலோகம் செல்லும்படி அவர்களை வழியனுப்புதல், க்ருஹ்யாக்னிக்கு அருகில் வந்து பிண்டங்களை வேறு பாத்ரத்தில் எடுத்து வைத்தல். பிண்டம் வைத்திருந்த தர்ப்பங்களை எடுத்து, **யே கே ச** என்ற மந்த்ரம் சொல்லி தர்ப்பணம் செய்தல்.

22. ப்ராஹ்மணர்களுக்கு தக்ஷிணை கொடுத்து, 'ச்ராத்தம் **அக்ஷய்யமாக** இருக்க வேண்டும்' என அனுக்ரஹம் வேண்டுதல், பித்ருபாத்ரத்தைக் கவிழ்த்து **அஸ்து ஸ்வதா** என்று கூறி அனுக்ரஹிக்க ப்ரார்த்தித்தல், **ஸ்வாதுஷம்** என்று தொடங்கும் மந்த்ரங்களைச் சொல்லி கவிழ்த்த பித்ரு பாத்ரத்தை நிமிர்த்தி வைத்தல் கர்த்தாவும் குடும்பத்தினரும் நமஸ்கரித்து ப்ராஹ்மணர்களின் ஆசிர்வாதம் பெறுதல்.

23. தர்ப்பத்தைக் கொடுத்து ப்ராஹ்மணர்களை எழுந்திருக்கப் ப்ரார்த்தித்து, அவர்களுக்கு இதுவரை ச்ரமம் கொடுத்ததை க்ஷமிக்கும்படி வேண்டி, ப்ரதக்ஷிணம் செய்து, நமஸ்கரித்து, அவர்கள் செல்லும் போது பின் சென்று வழி அனுப்புதல். பிறகு ஆசமனம் செய்து ஸாத்விகத்யாகம் செய்தல்—என்ற இவை எல்லாம் இப்பகுதியில் அடங்கும். இவற்றுடன் ச்ராத்தம் முடிவுறும்.



## आश्वलायनीयश्राद्धक्रमः

### १. ब्राह्मणप्रार्थना

पूर्वेद्युः ब्राह्मणान् निमन्त्र्य, परेद्युः (श्राद्धदिने) प्रातः काले पुनरपि निमन्त्र्य, आगतेभ्यः ब्राह्मणेभ्यः अभ्यङ्गं दत्वा, कर्ता स्वयं माध्याह्निकस्नानं माध्याह्निकं च कृत्वा—कृतस्नानानुष्ठानान् द्विजानासनेषु उपवेश्य, स्वयं पादौ प्रक्षाळ्य द्विराचम्य पवित्रपाणिः प्रणम्य—

...गोत्रस्य...शर्मणः ...पितुः प्रत्याब्दिकश्राद्धं अद्य भविष्यति । तत्र पुरूरवार्द्रवसंज्ञकविश्वेदेवेभ्यः भवता प्रसादः करणीयः (इति प्रार्थनम्) ।

ओम् , करिष्यामः । (इति प्रतिवचनम् ) ।

**प्राचीनावीती—**

... गोत्रस्य ... शर्मणः पितुः श्राद्धे पितृपितामहप्रपितामहार्थे भवता प्रसादः करणीयः (इति प्रार्थनम्) ।

ओम् , करिष्यामः (इति प्रतिवचनम्) ।

**उपवीती—**

... गोत्रस्य ... शर्मणः पितुः श्राद्धे श्राद्धसंरक्षकश्रीविष्ण्वर्थे भवता प्रसादः करणीयः (इति प्रार्थनम्) ।

ओम् , करिष्यामः (इति प्रतिवचनम् )

**प्राचीनावीती—**

तिलाक्षतान् गृहीत्वा—

समस्तसम्पत्समवाप्तिहेतवः समुत्थितापत्कुलधूमकेतवः ।
अपारसंसारसमुद्रसेतवः पुनन्तु मां ब्राह्मणपादपांसवः ।।

[पद्मपुराणम्. उत्तरखण्डम् ; अध्या. २८२. ४९.]

इति तिलाक्षतान् ब्राह्मणसमीपे विकीर्य—

**उपवीती—**

देवेभ्यो नमः—इति विश्वेभ्यो देवेभ्यः अञ्जलिं कृत्वा—

**प्राचीनावीती—**

पितृपितामहप्रपितामहेभ्यो नमः—इति पितृभ्यः अञ्जलिं कृत्वा—

**उपवीती—**

श्राद्धसंरक्षकश्रीमहाविष्णवे नमः — इति श्रीविष्णवे अञ्जलिं कृत्वा—

**प्राचीनावीती—**

देवताभ्यः पितृभ्यश्च महायोगिभ्य एव च ।
नमः स्वधायै स्वाहायै नित्यमेव नमो नमः ॥

इति **त्रिः** पठेत् । [ब्रह्मपुराणम्. २२०-१४०]

**ப்ரயோக விளக்கம்:—**

**1. ச்ராத்தத்தில் எழுந்தருளியிருக்கும்படி ஸ்வாமிகளை வேண்டுதல்.**

ச்ராத்தத்திற்கு முதல்நாள் இரவு ப்ராஹ்மணர்களை நிமந்த்ரணம் செய்து, மறுநாளும்-ச்ராத்த தினத்தன்று-விடியற்காலை மறுபடியும் நிமந்த்ரணம் செய்து, அவர்கள், வீட்டிற்கு வந்தவுடன், அவர்களுக்கு அப்யங்கம் கொடுத்து, பிறகு கர்த்தா, மாத்யாஹ்நிகஸ்நானம், மாத்யாஹ்நிகம் இரண்டையும் செய்து, பிராஹ்மணர்களும் ஸ்நானம் மாத்யாஹ்நிகம் முதலியன முடித்து வந்தவுடன் ஆஸனத்தில் அவர்களை அமரச்செய்து, கர்த்தா பாதப்ரக்ஷாளனம் செய்து கொண்டு, இருமுறை ஆசமனம்செய்து. பவித்ரபாணியாக ப்ராஹ்மணர்களை நமஸ்கரித்து, .. **கோத்ரஸ்ய ... சர்மண:** . . "**பிது: ப்ரத்யாப்திகம் பவிஷ்யதி, தத்ர பவதா... ப்ரஸாத: கரணீய:**" என்று ஒவ்வொருவரையும் ப்ரார்த்தித்து, எள் அக்ஷதை எடுத்து, "**ஸமஸ்த ஸம்பத்...**" என்பதைச் சொல்லி ஸ்வாமிகளின் பாதத்தில் சேர்க்கவும்.

**குறிப்பு**:—மாதாவின் ச்ராத்தமானல்.. **கோத்ராயா: ..நாம்ன்யா: மாது**: என்று சொல்ல வேண்டும். இதுபோல் **பித்ரு** என்று வருமிட மெல்லாம் மாற்றிக்கொள்ளவும். மாதாவுக்கு ச்ராத்தம் செய்யும் போது, மாதா, பிதாமஹீ, ப்ரபிதாமஹீ, இவர்களைத் தான் பித்ருக்க ளாகக் குறிப்பிட வேண்டும். சிலர், "வஸுரூப, ருத்ரபத்னீரூப, ஆதித்யபத்னீரூப" என்று விசேஷணங்களைச் சொல்லுகிறார்கள். அப்படி ஒரு ரூபம் சாஸ்த்ரத்தில் சொல்லப்பட வில்லையாகையால் இவ்வாறு சொல்லுதல் கூடாது. **வஸுரூப** என்று சிலர் சொல்வர். அதுவும் தேவையில்லை. **மாது**: என்பதற்குப் முன்போ பின்போ **பித்ருபூதாயா**: என்று சேர்த்துக் கொள்ளலாம். **பிது**: **மாது**: என்பதற்கு முன் **மம** என்பதையும் சேர்த்துக் கொள்ளலாம்.

**தேவேப்யோ நம**: என்று விச்வே தேவர்க்கும், **பித்ருப்யோ நம**: என்று பித்ருப்ராஹ்மணருக்கும், **விஷ்ணவே நம**: என்று விஷ்ணு விற்கும், அஞ்சலிசெய்து, **தேவதாப்ய**: என்ற ச்லோகத்தை மும் முறை சொல்லவும். மும்முறை சொல்வதால் பித்ருக்கள் சீக்ரம் வருகின்றனர் எனப் ப்ரஹ்ம புராணம் கூறுகின்றது.

आद्यावसाने श्राद्धस्य त्रिरावृत्त्या जपेत् सदा ।
पिण्डनिर्वपणे वापि जपेदेवं समाहितः ॥
क्षिप्रमायान्ति पितरः राक्षसाः प्रद्रवन्ति च ।
प्रीयन्ते त्रिषु लोकेषु मन्त्रोऽयं तारयत्युत ॥

[ब्रह्मपुराणम् — २२०. १४४-१४५]

**புரூரவஸ்** என்பது, **புரூரவ**: என்பதாகவும், **மாத்ரவஸ்** என்பது, **ஆர்த்ரவ**, **மாத்ரவஸ**:, **மார்த்ரவ**, **மாத்ரவ**, எனப் பலவிதத்திலும் ஸ்ம்ருதிகளில் கூறப்பட்டுள்ளன. ஸ்ரீமத் கோபால தேசிகன் ஆஹ்நிகத்தில், **पुरूरव-आर्द्रव** என்றே தரப்பட்டுள்ளதால் அப்பதங்களே இங்கு உபயோகிக்கப்பட்டன. விரும்புகிறவர்கள், **'पुरूरवो-माद्र-वस्संज्ञक'**, என்றும் சொல்லிக் கொள்ளலாம்.

ப்ருகு மஹர்ஷியால் மார்பில் உதைக்கப்பட்ட விஷ்ணு வாக்யம், **ஸமஸ்தஸம்பத்** என்ற ச்லோகம்.

## २. योग्यताप्रार्थना

**उपवीती**—पुनः प्रणम्य—

**प्राचीनावीती**—स्वामिनः अस्मिन् दिवसे—

... गोत्रं ... शर्माणं मम पितरमुद्दिश्य प्रत्याब्दिक-श्राद्धं कर्तुकामोऽस्मि । अयं देशः, कालः, अस्मिन् गृहे विद्य-

मानाः पक्वापक्वपदार्थाश्च श्राद्धार्हाः भूयासुरिति, इयं भूः गया-क्षेत्रसदृशी भूयात् इति, मम श्राद्धकरणे अधिकारसम्पदस्तु इति च भवन्तो महान्तोऽनुगृह्णन्तु – इति प्रार्थनम् ।

–तथाऽस्तु अधिकारसम्पदस्तु–इति प्रतिवचनम् ।

**उपवीती**–उत्तराभिमुखः—

श्राद्धभूमिं गयां ध्यात्वा ध्यात्वा देवं गदाधरम् ।

**प्राचीनावीती**–दक्षिणाभिमुखः—

वस्वादींश्च पितॄन् ध्यात्वा ततः श्रद्धं प्रवर्तये ॥

इति प्राथ्र्य, [पाद्मम्. पातालखण्डम्. ११३. ७८]

"प्रवर्तय" इति प्रतिवचनं गृह्णीयात् ॥

**ப்ரயோக விளக்கம்:—**

**2. ச்ராத்தம் செய்வதற்கான யோக்யதையை அனுக்ரஹிக்கும்படி வேண்டுதல்.**

உபவீதியாக மறுபடியும் நமஸ்காரம் செய்து, ப்ராசீனாவீதியாக **ஸ்வாமிந:** என்று தொடங்கி, **அனுக்ருஹ்ணந்து** என்றவரை சொல்லி பிரார்த்தித்து, **ததாஸ்து, அதிகார ஸம்பதஸ்து** என்று அனுக்ரஹம் கிடைத்தவுடன், உபவீதியாக "**ச்ராத்தபூமிம் . கதாதரம்** என்பதைச் சொல்லி, ப்ராசீனாவீதியாக "**வஸ்வாதீன்**...தொடங்கி **ப்ரவர்த்தயே** என்கிறவரை சொல்லி ப்ரார்த்திக்கவும். **ப்ரவர்த்தய** என்று சொல்லி அனுக்ரஹம் செய்வார்கள். **ச்ராத்தபூமிம்** என்பதற்கு பதிலாக **ச்ராத்த பூமௌ** எனறும் சிலர் சொல்வர். **கதாதரம்** என்பதற்குப் பதிலாக **ஜனார்தனம்** என்றும் பாடம் உண்டு.

## ३. श्राद्धार्थः सङ्कल्पः

**उपवीती—**

दर्भेष्वासीनः दर्भान् धारयमाणः पवित्रपाणिः प्राणानायम्य–अस्मद्गुरुभ्यो नमः । अस्मत्परमगुरुभ्यो नमः । अस्मत्सर्वगुरुभ्यो नमः ।

१. श्रीमान् ... । ...सदा हृदि ॥ २. गुरुभ्यः ... ।...जगतां पती॥
३. स्वशेष ... । ... स्वयम् ॥ ४. शुक्लांबर... । ...शान्तये ।
५. यस्य द्विरद ... । ... तमाश्रये ॥

हरिः ओम् तत् । श्रीगोविन्द, गोविन्द, गोविन्द-

**प्राचीनावीती**—

अस्य श्रीभगवतः ..... पुण्यतिथौ ..... प्रीत्यर्थं ..... गोत्रस्य...शर्मणः पितुः प्रत्याब्दिकश्राद्धं पिण्डपितृयज्ञव्यतिषङ्गपूर्वकं पार्वणविधानेन अद्य करिष्ये इति संकल्प्य– दर्भान् दक्षिणतः निरस्य–

पाणिहोमविधानपक्षे, "पार्वणविधानेन" इत्यस्य स्थाने, "पाणिहोमविधानेन अद्य करिष्ये" इति कथयेत् ।

कुरुष्व – इति प्रतिवचनम् ।

**उपवीती** – अपः उपस्पृश्य—

**सात्त्विकत्यागः**— भगवानेव पितृश्राद्धाख्यं कर्म स्वस्मै स्वप्रीतये स्वयमेव कारयति ॥

**ப்ரயோக விளக்கம்:—**

**3. ச்ராத்தத்திற்கான ஸங்கல்பம்**

உபவீதியாக ப்ராணாயாமம் செய்து, கைகூப்பி **அஸ்மத் குருப்யோ நம:** ..தொடங்கி, **ஸ்ரீகோவிந்த** என்பதைச் சொல்லும் போது **ப்ராசீனாவீதம்** செய்து ஸங்கல்ப முத்ரை செய்து, திதி, வார, நக்ஷத்ரங்களைச் சொல்லி, **புண்யதிதௌ ... ப்ரீத்யர்த்தம் .. கோத்ரஸ்ய ..சர்மண: பிது: ..கரிஷ்யே** என்று ஸங்கல்பம் செய்து **குருஷ்வ** என்று பதில் கிடைத்த உடன் உபவீதியாக ஜலத்தைத் தொட்டு, பின்னர் ஸாத்விகத்யாகம் செய்யவும். ஸ்மார்த்தர்களும் **தென்கலை ஸ்ரீ வைஷ்ணவர்களும் சுக்லாம்பரதரம்** என்பதிலிருந்து சொல்லித் தொடங்கவேண்டும். பாணி ஹோமமானால் **பாணி ஹோம விதானேன அத்ய கரிஷ்யே** என்று சொல்ல வேண்டும்.

## ४. (१) अन्वाधानम्

उपवीती–

तूष्णीं औपसानाग्निं प्रतिष्ठाप्य–

समिद्द्वयं गृहीत्वा–

सोमं पितृमन्तं अग्निं कव्यवाहनं च गृहसिद्धान्नद्रव्येण यक्ष्ये–

स्वाहा – प्रजापतय इदं न मम। एकां समिधमाधाय –

स्वाहा – प्रजापतय इदं न मम। द्वितीयां समिधं अग्नौ आधाय—

सोदकेन पाणिना त्रिः प्रदक्षिणं अग्निं परिसमुह्य, प्राग्दक्षिणाग्रैः दर्भैः परिस्तीर्य, पर्युक्ष्य—

**ப்ரயோக விளக்கம்:**

### 4. (1) அன்வாதானம்

அக்னியை மந்த்ரம் எதுவுமின்றி வைத்த பின், இரண்டு ஸமித்துக்களை எடுத்துக் கொண்டு, **ஸோமம் பித்ருமந்தம்...யக்ஷ்யே** வரை சொல்லி, **ஸ்வாஹா ப்ரஜாபதயே** என்று மந்த்ரத்தை நினைத்துக் கொண்டு ஒரு ஸமித்தைச் சேர்க்க. **ஸ்வாஹா ப்ரஜா பதயே** என்று மந்த்ரத்தை மனத்தில் நினைத்துக்கொண்டு மற்றொரு ஸமித்தையும் சேர்க்க.

பிறகு ஜலத்தைக் கையிலெடுத்து அக்னியைச் சுற்றிலும் மூன்று தடவை வலமாகத் துடைத்து, வடக்கிலும் தெற்கிலும் கிழக்கு நுனியாகவும், கிழக்கிலும் மேற்கிலும் தெற்கு நுனியாகவும் தர்ப்பத்தை (குறைந்தது நான்கு நான்கு) வைத்து, ஜலத்தை எடுத்து அக்னியைச் சுற்றி மூன்று தடவை தாரையாக விட்ட பிறகு—

**குறிப்பு:**-ஔபாஸனாக்னி இருப்பதால் அதையே ச்ராத்த ஹோமத்திற்கும் வைத்துக் கொள்ள வேண்டும். ஆஹிதாக்னியாக இல்லாத க்ருஹஸ்தர் ஔபாஸனாக்னியில் ச்ராத்தாங்க ஹோமத்தைச் செய்ய வேண்டும் என்று ஆச்வலாயனர் ச்ரௌத ஸூத்ரத்தில் சொல்லியிருக்கிறார். ஸூத்ரம்:– **एवमनाहिताग्निर्नित्ये** 2-7-18: "ஆஹிதாக்னி

செய்வது போலவே அஹிதாக்னியான க்ருஹஸ்தன் தனது நித்யாக்னியான ஔபாஸன அக்னியில் இந்த ஹோமத்தைச் செய்ய வேண்டும்'' என்பது இதன் பொருள்.

## ४. (२) पात्रसादनम्

अग्नेः उत्तरदेशं प्रोक्ष्य दर्भानास्तीर्य तेषु एकैकशः पात्राणि- चरुस्थालीं, स्फ्यं, स्रुवं, ध्रुवां, सकृदाच्छिन्नं, इध्मं, मेक्षणम्, कमण्डलुं,-अञ्जन–अभ्यञ्जन–कशिपु–उपबर्हणानि–सादयित्वा।

**ப்ரயோக விளக்கம்:—**

### 4.(2) பாத்ர ஸாதனம்

அக்னிக்கு வடக்கில் உள்ள இடத்தை ப்ரோக்ஷித்து, தர்ப்பத்தைப் பரப்பி அவற்றின்மேல் சருபாத்திரம், (ஒரு தொன்னை), ஸ்ப்யம் (இது ஒரு மரக்கத்தி போன்றது. இதற்கு ஒரு ஸமித்தையே உபயோகிப்பர்) ஸ்ருவம்; (நெய்விடும் பலாச இலை), த்ருவா (நெய் தொன்னை) ஸக்ருதாச்சின்னம் (தர்ப்பங்கள்), இத்மம், (பதினைந்து ஸமித்துக்கள்—கொண்ட ஒரு கட்டு) மேக்ஷணம் (மரத்தினாலான ஒரு சிறு கரண்டி போன்றது. ஒரு ஸமித்தின் நுனியில் அத்தி இலையைக் கட்டி இதைத் தயார் செய்து கொள்கிறார்கள்) கமண்டலு, (ஜலத்திற்கான தொன்னை) மை, நல்லெண்ணெய், கசிபு (கட்டில் அல்லது படுக்கை) உபபர்ஹணம் (தலையணை) என்ற இவைகளை வைத்து—

**குறிப்பு:**—கசிபு, உபபர்ஹணம் என்ற இரண்டையும் தற்போது தர்ப்பத்தினால் செய்து கொள்கிறார்கள்.

## ४. (३) पात्रसंस्कारः

कमण्डलुपात्रं कर्तुः पुरतो दर्भेषु निधाय, त्रिदर्भपवित्र- मन्तर्धाय, तिलानवकीर्य, तूष्णीं जलमापूर्य, तूष्णीं त्रिः उत्पूय, उत्तानानि पात्राणि कृत्वा, त्रिः प्रोक्ष्य, कमण्डलुं दक्षिणतो निधाय—

**ப்ரயோக விளக்கம்:—**

### 3. 4) பாத்ரங்களுக்கு ஸம்ஸ்காரம்

தீர்த்தத்திற்காக வைத்திருந்த தொன்னையை கர்த்தா தனக்கெதிரில் தர்ப்பங்களின் மேல் வைத்து, அதில் மூன்று தர்ப்பங்களா

லான பவித்ரத்தை வைத்து, எள்ளைச் சேர்த்து தீர்த்தத்தினால் அதை நிரப்பி, மந்த்ரம் எதுவும் சொல்லாமல் மூன்று தடவை உத்பவனம் செய்து (தொன்னையின் மேற்புறமிருந்து கீழ்ப்புறம் வரை பவித்ரத்தை மூன்றுமுறை நகர்த்துவதன் மூலம் தீர்த்தத்தைப் பரிசுத்தம் செய்து) அக்னிக்கு வடக்கில் கவிழ்த்து வைத்துள்ள பாத்ரங்களை நிமிர்த்தி எல்லாவற்றையும் பவித்ரத்தினால் மும்முறை ப்ரோக்ஷித்து கமண்டலுவைத் தென்புறத்தில் வைக்கவும். பவித்ரம் என்பது இங்கு மூன்று தர்ப்பங்கள். இவற்றில் முடிச்சு போடுதல் கூடாது.

## ४ (४) चरुनिष्पादनम्

### (अ) चरुनिष्पादने श्रौतसूत्रोक्तप्रकारः—

शूर्पे चरुस्थालीं निधाय व्रीहिराशितः उपात्तैः व्रीहिभिः स्थालीं तूष्णीं आपूर्य, पूर्णायाः स्थाल्याः आस्यं निमृज्य शूर्पे पतितान् व्रीहीन् पुनः धान्यराशौ निक्षिपेत् । अथ कृष्णाजिनोपरि निहिते उलूखले स्थालीगतान् व्रीहीन् प्रक्षिप्य पत्नी अवहन्यात् । फलीकृतान् तण्डुलान् सकृत्प्रक्षाळ्य स्थाल्यां औपासनाग्नौ श्रपयेत् । श्रपितं उत्तरतो निधायाभिधारयेत् ।

### (आ) चरुनिष्पादने द्वितीयः प्रकारः—

गृहसिद्धमन्नं पात्रे आनाय्य मन्त्रं विना औपसनाग्नौ क्षणं निधाय, अग्नेरुत्तरतोऽवस्थाप्याभिधारयेत् ।

### (इ) चरुनिष्पादने तृतीयः प्रकारः—चरुनिर्वापणम् ।

पवित्रं चरुपात्रे निधाय—

**प्राचीनावीती**—

गृहसिद्धमन्नमानाय्य, तस्मात्—

(१) सोमाय पितृमते त्वा जुष्टं निर्वपामि इति मन्त्रमावृत्य चतुर्वारं (त्रिवारं वा) निर्वापं कृत्वा - (अन्नमादायान्न-

स्मिन् पात्रे निधाय) सोमाय पितृमते त्वा जुष्टं प्रोक्षामि इति मन्त्रमावृत्य चतुर्वारं (त्रिवारं वा) प्रोक्ष्य—

(२) अग्नये कव्यवाहनाय त्वा जुष्टं निर्वपामि इति मन्त्रमावृत्य चतुर्वारं (त्रिवारंवा) निर्वापं कृत्वा—

अग्नये कव्यवाहनाय त्वा जुष्टं प्रोक्षामि इति मन्त्रमावृत्य चतुर्वारं (त्रिवारं वा) प्रोक्ष्य, अग्नौ क्षणं निध्रायोत्तरतः प्रतिष्ठितं अभिघारयेत् ।

**ப்ரயோக விளக்கம்**

**4. (4) சருநிஷ்பாதனம்**:—சருவை ஸித்தம் செய்தல்.

சருவை ஸித்தம் செய்ய இங்கு மூன்று முறைகள் தரப்பட்டுள்ளன. (அ) என்ற பகுதியில் தரப்பட்டுள்ளது தான் மஹர்ஷி ஆச்வலாயனர் பிண்ட பித்ரு யஜ்ஞ ப்ரகரணத்தில் விதித்த முறையாகும். ச்ரௌதம். 2.6.5-8 ஸூத்ரங்கள் பார்க்க.

(அ) **முதல் முறை**: முறத்தில் சருசமைக்கும் ஸ்தாலியை வைத்துக் கூடையில் உள்ள நெல்குவியலிலிருந்து ஸ்தாலி நிரம்பும் வரை நெல்லை அள்ளிப் போட்டு, பாத்ரம் நிரம்பியபின் ஸ்தாலியின் வாய்ப்புறத்தை வழித்து முறத்தில் விழுந்த நெல்லை நெற்குவியலில் சேர்த்து விட வேண்டும். பிறகு மான்தோலைப் பரப்பி அதன் மேல் வைத்த உரலில் ஸ்தாலியில் உள்ள நெல்லை இட்டுக் கர்த்தாவின் மனைவி குத்தி உமி நீக்கி எடுத்த அரிசியை ஒருதடவை களைந்து ஸ்தாலியில் இட்டு ஔபாஸன அக்னியில் வைத்து சமைக்க வேண்டும். பின் இறக்கி வைத்து அபிகாரணம் செய்ய. இங்கு செய்யப்படும் எந்த செயலுக்கும் மந்த்ரம் இல்லை.

**(ஆ) இரண்டாம்முறை**: முதல் முறையில் சொல்லப்பட்டவற்றை எல்லாம் செய்ய நேரமாகுமாதலால் சிஷ்டர்கள் பின்பற்றும் முறை இரண்டாவதாக இங்கு (ஆ) என்ற பகுதியில் கூறப்பட்டுள்ளது.

வீட்டில் சமைத்த அன்னத்தை ஒரு பாத்ரத்தில் கொண்டு வரச் செய்து சமைப்பதாக பாவித்து ஔபாஸன அக்னியில் வைத்து இறக்கி வடக்கில் வைத்து அபிகாரணம் செய்ய. மந்த்ரம் எதுவும் இல்லை. இரண்டுபிடி அரிசியை இதற்கென தனியாக சமைத்துக் கொள்ளலாம். இந்த முறையினால் கால விளம்பம் தவிர்க்கப்படுகிறது.

**குறிப்பு:**— பக்வமான அன்னத்தையே மறுபடியும் ஹோமத்திற்கான அக்னியில் வைத்து எடுப்பதன் மூலம் சாஸ்த்ரார்த்தம் செய்யப் பட்டதாகும் என்பதை ப்ர. பாரிஜாதம் சௌனக வாக்யத்தை உதாஹரித்து நிரூபிக்கிறது.

**पश्चादन्नं गृहे पक्वं पृथक् कृत्वान्यभाजने । तत्र त्वग्नावधिश्रित्य तत्रस्थमभिघार्य च । उत्तरस्यावतार्याग्नेः पुनरपि अभिघार्य च । प्रत्यगग्नेः निधायाज्यभाजनस्य समीपतः.** ஏடு. 267. வரி. 22.

உத்ஸர்ஜன கர்மவிஷயமாக கூறப்பட்ட இதை கௌண பக்ஷமாக ச்ராத்தத்திலும் கொள்ளலாம்.

இம்முறையில் சாஸ்த்ரம் ஓரளவுதான் பின்பற்றப் படுகிறது. முற்றிலும் இல்லை என்ற குறை இதற்கு உண்டு.

**(இ) மூன்றுவது முறை:—**

**(इ)** என்ற பகுதியில் கூறப்படும் இம்முறையைச் சில சிஷ்டர்கள் அனுஷ்டிக்கிறார்கள். சமைத்த அன்னத்தைக் கொண்டு வந்து—

சருஸ்தாலியில் பவித்ரத்தை வைத்து. **ப்ராசீனாவீதியாக, ஸோமாய...நிர்வபாமி** என்ற மந்த்ரத்தை நான்கு முறை (அல்லது மூன்று முறை) சொல்லி, ஒவ்வொருமுறை சொல்லும்போதும் பாத்ரத்திலிருந்து ஸ்தாலியில் அன்னத்தை எடுத்து வைத்து (நிர்வாபம் செய்து), **ஸோமாய . ப்ரோக்ஷாமி** என நான்கு முறை (அல்லது மூன்று முறை) கூறி ப்ரோக்ஷிக்கவும். இதேபோல் **அக்னயே . நிர்வபாமி** என்ற நான்கு முறை (அல்லது மூன்று முறை) கூறி நிர்வாபம் செய்து, **அக்னயே...ப்ரோக்ஷாமி** என நான்கு முறை (அல்லது மூன்று முறை) கூறி ப்ரோக்ஷிக்கவும். பின் சிறிது நேரம் அக்னியில் வைத்து வடக்கில் இறக்கி வைத்து **அபிகாரணம்** செய்யவும். பித்ரு கார்யமானதால் சிலர், நிர்வாபம், ப்ரோக்ஷணம் இரண்டையும் மும்மூன்று முறை செய்கின்றனர்.

**குறிப்பு** :— ஆச்வலாயனர் நிர்வாபம், ப்ரோக்ஷணம் இரண்டையும் நான்கு முறை செய்ய வேண்டும் என்றும் கூறவில்லை. இதற்காக மந்த்ரமும் தரவில்லை. **பரிசிஷ்டம், காரிகை** இரண்டும் **நிர்வாப ப்ரோக்ஷணங்களைச்** செய்யச் சொல்லவில்லை மந்த்ரங்களையும் தரவில்லை. **ஸ்தாலீபாகம்** என்ற கர்மாவில் நிர்வாப-ப்ரோக்ஷணம் இரண்டையும் ஆச்வலாயனர் கூறியிருப்பதால் அதைச் சிலர் இங்கு **அதிதேசம்** செய்து விட்டனர். சிஷ்டர்கள் பலருக்கும்

இம்முறை சம்மத மில்லாதது. முதலில் கூறிய முறையை அநுஷ்டிக்க முடியாதவர்கள் இரண்டாவதாகக் கூறப்பட்ட முறையை அனுஷ்டிக் கலாம்.

மூன்ருவதாகக் கூறப்பட்ட முறையை அனுஷ்டானத்தில் கொண்டவர்கள், விரும்பினுல், அவ்வாறு அனுஷ்டிக்கலாம்.

சருவைத் தயார் செய்ய வேண்டுமென்று நியமமுள்ளது. அப்படிச் செய்வதில் ச்ரமமிருப்பதால் ச்ராத்தத்திற்காகச் செய்யப் பட்ட அன்னமே கொண்டு வரப்பட்டு ஹவிஸ்ஸாக ஏற்றுக் கொள்ளப்படுகிறது. சிலர் இதற்காக ஒரு ஆழாக்கு அரிசியைத் தனியாகச் சமைப்பதும் உண்டு.

## ४. (५) अग्नेः अतिप्रणयनम्

अथ औपासनाग्नेः एकमुल्मुकमादाय प्राग्दक्षिणा अग्निं प्रणयेत्—

**ये रूपाणि प्रतिमुञ्चमानाः असुरास्सन्तः स्वधया चरन्ति ।**
**परापुरो निपुरो ये भरन्ति अग्निः तान् लोकात् प्रणुदातु अस्मात् ॥**

[आश्व. श्रौ. सू. २. ८. २]

इति आग्नेय्यां दिशि अग्निं प्रतिष्ठाप्य, तमग्निं उपसमाधाय, परिसमुह्य, प्राग्दक्षिणाग्रैः दर्भैः परिस्तीर्य, पर्युक्ष्य—

[अस्य अतिप्रणीताग्निरिति नाम]

**ப்ரயோக விளக்கம்:—**

**4.(5) ஔபாஸன அக்னியிலிருந்து சிறிது அக்னியை எடுத்துத் தனியே வைத்தல்.**

பிறகு, ஔபாஸாக்னியிலிருந்து எரிகின்ற ஒரு சிதறலை எடுத்து **யே ரூபாணி...அஸ்மாத்** என்ற மந்த்ரத்தைச் சொல்லி ஔபாஸன அக்னிக்குத் தென்கிழக்கில் (ஒரு முழம் தள்ளி) ப்ரதிஷ்டை செய்து (வைத்து), விறகுச்சிதறல்களை இட்டு ஜ்வலிக்கச் செய்த பின் பரிஸ மூஹனம் செய்து, தென்கிழக்குத் திசைநோக்கி இருக்கும்படி நுனி

யுள்ள தர்பங்களாலே பரிஸ்தரணம் செய்து, பர்யுக்ஷணம் செய்ய வேண்டும்.

**குறிப்பு** :—இவ்வாறு எடுத்து வைக்கப்பட்ட அக்னிக்கு **அதிப்ரணீதாக்னி** என்று பெயர். ச்ராத்த ரக்ஷணத்திற்கான இது, ச்ராத்தம் முடியும்வரை அணையாமல் இருக்கவேண்டும்.

**யே ரூபாணி** என்பது ஸூத்ர மந்த்ரமாதலால் ஸ்வரம் தேவை யில்லை. **अग्निष्टाल्लोकात्** என்ற பாடம் தவருக இருக்கிறது. மஹர்ஷி அதிப்ரணயனத்தைச் சரு சமைப்பதற்கு முன்பே செய்யும்படி சொல்லி யிருக்கிருர். ப்ரயோககாரர்கள் இதன் க்ரமத்தை மாற்றி, சரு சமைத்த பிறகு இதைச் செய்யச் சொல்லி இருக்கிருர்கள்.

## ४. (६) पात्राणां दक्षिणतः सादनम् , इध्महोमश्च

**प्राचीनावीती**—

स्फचं आदाय, अर्वाक् अतिप्रणीतात् स्फयेन रेखां लिखेत् ।

**अपहताः असुराः रक्षांसि वेदिषदः** इति । [आश्व. श्रौ.२.७.८.]

तां रेखामभ्युक्ष्य - सकृदाच्छिन्नैरवस्तीर्य, अनुत्पूतमाज्यं ध्रुवायां आनीय, दक्षिणतो निधाय, स्रुवेण आज्यमादाय, चरुमभिघार्य, सकृदाच्छिन्नमूले सादयेत् ।

अतिप्रणीताग्नेः पश्चात् कांश्चित् दर्भानास्तीर्य, तेषु अञ्जन-अभ्यञ्जन-कशिपु - उपबर्हणानि सादयित्वा—

मेक्षणं स्रुवं च गृहीत्वा, अग्नौ प्रतितप्य, दर्भैः संमृज्य पुनः प्रतितप्य, औपासनाग्नेः अतिप्रणीतस्य च मध्ये रेखायां निक्षिपेत् । सम्मार्जनोपयुक्तान् दर्भान् अद्भिः संस्पृश्य, प्रागग्रं अग्नौ प्रहरेत् ॥

औपासनाग्निं तूष्णीमलंकृत्य —

प्राचीनावीती—

इध्ममादाय, द्विरभिघार्य पितृभ्यो नमः इति पितॄन् ध्यात्वा, इध्मं तूष्णीं अग्नौ निदधाति ॥

**ப்ரயோக விளக்கம்:—**

**4. (6) பாத்ரங்களைத் தெற்கில் வைத்தலும் இத்ம ஹோமமும்**

ஸ்ப்யத்தை எடுத்து அதிப்ரணீதாக்னி தொடங்கி ஔபாஸனாக்னி வரை **அபஹதா: அஸுரா: ரக்ஷாம்ஸி வேதிஷத;** என்ற மந்த்ரத்தைச் சொல்லி ஸ்ப்யத்தினால் ஒருகோடு இழுக்கவும். இழுத்த கோட்டை ஜலத்தினால் ப்ரோக்ஷித்து தென்கிழக்கு நோக்கி இருக்கும் முனையையுடைய மூன்று தர்ப்பங்களை அதன்மேல் பரப்பி உத்பவனம் செய்யப் படாத நெய்யுள்ள ஆஜ்ய பாத்ரத்தை எடுத்து, தெற்கில் வைத்து ஸ்ருவத்தினால் சருவை அபிகாரணம் செய்து (நெய்தாரையால் நனைத்து) ஸக்ருதாச்சின்ன தர்ப்பத்தின் அடிப் பகுதியில் வைத்து, ஔபாஸனாக்னிக்குத் தெற்கில் தெற்கு நுனியாக சில தர்ப்பங்களை பரப்பி, அக்னிக்கு வடக்கில் முன்பு வைத்திருந்த அஞ்சனம், அப்யஞ்சனம், கசிபு, உபபர்ஹணங்களை வைக்கவும், **ஸக்ருதாச்சின்னம்** — வேர்ப்பகுதியிலிருந்தே கொய்யப்பட்ட தர்ப்பங்கள். **அபஹதா: அஸுரா:** என்பது ஸூத்ரமந்த்ரம்; வேதத்ரிஸ்வரம் இல்லை.

மேக்ஷணத்தையும் ஸ்ருவத்தையும் எடுத்து அக்னியில் காய்ச்சி தர்ப்பத்தினால் துடைத்து மறுபடியும் அக்னியில் காய்ச்சி, ப்ரோக்ஷித்து, ஔபாஸனாக்னிக்கும் அதிப்ரணீதாக்னிக்கும் மத்தியில் வைத்து விட்டு, துடைக்க உபயோகித்த தர்ப்பங்களை ஜலத்தால் துடைத்துக் கிழக்கு நுனியாக இருக்கும்படி அக்னியில் போடவும்.

ஔபாஸனாக்னியை மந்த்ரம் சொல்லாமல் அலங்கரித்தபின், **ப்ராசீனாவீதியாக,** பதினைந்து ஸமித்து கொண்ட இத்மத்தை எடுத்து இருமுறை நெய்தாரை விட்டு, **பித்ருப்யோ நம:** என்று நினைத்துக் கொண்டு அக்னியில் வைக்கவும். 'பித்ருப்யோநம: என்ற வாக்யத்தை நினைக்காமலும் வைக்கலாம் என்பது சிலர் கருத்து.

## ५. (१) अथ पुनर्वरणम् (विश्वदेववरणम्)

उपवीती—

विश्वदेवब्राह्मणहस्ते अपः प्रदाय –

... गोत्रस्य .... शर्मणः पितुः, प्रत्याब्दिकश्राद्धे पुरूरवार्द्रवसंज्ञकविश्वेषां देवानां इदमासनम् । सयवं ऋजुदर्भद्वयं हस्ते दत्वा, पुनः अपः प्रदाय—

पुरूरवार्द्रवसंज्ञकविश्वदेवार्थे भवता क्षणः कर्तव्यः इति प्रार्थनम्—

ओम् , तथा – इत्युत्तरस् ।

प्राप्नोतु भवान् – इति प्रार्थनम् ।

प्राप्नवानि - इति उत्तरम् ।

इमे अक्षताः । सकलाराधनैः स्वर्चितम् ।

**ப்ரயோக விளக்கம்**

**5. (1) புனர்வரணம்-விச்வேதேவவரணம்**

விச்வதேவர்க்காக உத்தேசித்த ப்ராஹ்மணரிடம் **தீர்த்தம்** கொடுத்து...**கோத்ரஸ்ய ..இதம் ஆஸனம்**' என்பது வரை சொல்லி, அக்ஷதையுடன் கூடிய, மடிக்கப்படாத தர்ப்பத்தை அவர் கையில் கொடுத்து, மறுபடியும் அவர் கையில் தீர்த்தம் கொடுத்து. **புரூரவார்த்ரவ...க்ஷண: கர்த்தவ்ய:** என்கிறவரையுள்ள மந்த்ரத்தைச் சொல்லி ப்ரார்த்திக்க, **ஓம் ததா** என்று அவர் பதில் சொல்வார். **ப்ராப்னோது பவான்** என்று சொல்லி கையைத் தொட்டு ஆஸனத்தில் அமரும்படி பிரார்த்தித்து, **இமே அக்ஷதா:... ஸ்வர்ச்சிதம்** என்கிற வரை சொல்லி ப்ராஹ்மணரின் வலது பாகத்தில் அக்ஷதை சேர்க்க.

**குறிப்பு**: ப்ராஹ்மணர்களை மூன்று தடவை வரிக்க வேண்டும் என்று ஆபஸ்தம்பக்ருஹ்ய ஸூத்ரவ்யாக்யானம் சொல்லுகின்றது. ச்ராத்த தினத்திற்கு முன்தினம் செய்த ப்ரார்த்தனையை முதல் வரணமாகக் கொள்ள வேண்டும். காலையில் முதலில் செய்ததையும் முதல் வரணமாகக் கொள்ளலாம். இது இரண்டாவது வரணம்.

**पूर्वेद्युः निवेदनम् । अपरेद्युः द्वितीयं तृतीयं चामन्त्रणम् इति वचनात् ।**
**[आप. गृ. सू. व्याख्या १. ख. २१. सू. ९]**

**'प्राप्नोतु भवानिति आसनेषु उपवेशनम् । प्राप्नवानीति उपविशति । एषः आचारः । हरदत्तव्याख्या, ४. ८. २.**

## ५. (२) पितृवरणम्

**प्राचीनावीती—**

पित्रर्थब्राह्मणहस्ते अपः प्रदाय—

...गोत्रस्य ...शर्मणः पितुः प्रत्याब्दिकश्राद्धे, ...गोत्राणां... शर्मणां ...वसुरुद्रादित्यरूपाणां अस्मत्पितृ - पितामह—प्रपितामहानां इदमासनम्- द्विगुणभुग्नं त्रिदर्भपवित्रं सतिलं दत्वा, पुनः अपः प्रदाय—

अस्मत्पितृपितामहप्रपितामहार्थे भवता क्षणः कर्तव्यः –
ओम् तथा-इति प्रतिवचनम् ।
प्राप्नोतु भवान् । प्राप्नवानि-इत्युत्तरम् ॥

इमे तिलाः - सकलाराधनैः स्वर्चितम्- इति ब्राह्मणस्य वामभागे विकिरेत् ॥

**ப்ரயோகவிளக்கம்**

5. (2) தேவப்ராஹ்மணருக்குச் செய்தது போல் பித்ரு ஸ்தானத்தில் வரிக்கப்பட்டவருக்கும் செய்ய வேண்டும். வரிக்கும் போது பிதா பிதாமஹர் ப்ரபிதாமஹர் மூவரின் பெயர்களையும் சொல்ல வேண்டும். இரண்டாக மடிக்கப்பட்ட மூன்று தர்ப்பங்களாலான புக்னத்தை ஆஸனமாகத் தரவேண்டும். அரிசிக்குப் பதிலாக எள் உபயோகிக்கப்பட வேண்டும். இதை ஸ்வாமியின் இடது பாகத்தில் ஸமர்ப்பிக்க.

## ५. (३) विष्णुवरणम्

**उपवीती—**

विष्ण्वर्थब्राह्मणहस्ते अपः प्रदाय – ...गोत्रस्य ...शर्मणः पितुः श्राद्धे श्राद्धसंरक्षकमहाविष्णोः इदमासनम् । ऋजुदर्भद्वयं साक्षतं दत्वा—

पुनः अपः प्रदाय—श्राद्धसंरक्षकश्रीविष्णवर्थे भवता क्षणः कर्तव्यः। ओम्, तथा - इति प्रतिवचनम् ।

प्राप्नोतु भवान् । प्राप्नवानि - इत्युत्तरम् ॥

इमे अक्षताः । सकलाराधनैः स्वर्चितम्—

इति अक्षतान् दक्षिणभागे विकिरेत् ॥

**ப்ரயோகவிளக்கம்**

5.(3) விச்வேதேவர்க்குச் செய்தது போலவே விஷ்ணுவிற்கும் எல்லாம் செய்ய வேண்டும். மடிக்கப்படாத தர்ப்பமும் அக்ஷதையும் உபயோகிக்கவேண்டும்.

## ६. (१) पादप्रक्षालनमण्डलार्चनम्

पादप्रक्षालनस्थले उत्तरभागे चतुरश्रं, दक्षिणभागे वर्तुल च मण्डलं गोमयजलेन उपलिप्य, परिकल्प्य—

**उपवीती**–

... गोत्रस्य ... शर्मणः पितुः श्राद्धे पुरूरवार्द्रवसंज्ञक-विश्वेषां देवानां श्रीविष्णोश्च पाद्यस्थाने इदमासनम्–इमे दर्भाः। सकलाराधनैः स्वर्चितं इति अक्षतान् क्षिपेत् ।

**प्राचीनावीती**—

(वर्तुलमण्डले) ... गोत्रस्य ... शर्मणः पितुः श्राद्धे... गोत्राणां ... शर्मणां ... वसुरुद्रादित्यरूपाणां अस्मत्पितृ-पिता-मह-प्रपितामहानां पाद्यस्थाने इदमासनम् - इति भुग्नं निधाय, इमे तिलाः इति तिलान् विकिरेत् ।

**ப்ரயோக விளக்கம்**

**6. 1 பாதப்ரக்ஷாளன மண்டலார்ச்சனம்**

*பாதப்ரக்ஷாளனத்திற்கான இடத்தின் வலது பகுதியில் நான்கு மூலைகள் உள்ள சமசதுரமான ஒரு ஸ்தலத்தையும், அதற்குத்*

தெற்கில் வட்டவடிவமான ஒரு ஸ்தலத்தையும் கோமயஜலத்தினால் துடைத்து,ஸித்தம் செய்து, —கர்த்தா உபவீதியாக,

**...கோத்ரஸ்ய...ஸகலாராதகை: ஸ்வர்ச்சிதம்** வரையுள்ள மந்த்ரத்தைச் சொல்லி தர்ப்பத்தையும் அக்ஷதைகளையும் சதுரமான மண்டலத்தில் சேர்க்க வேண்டும். இதேபோல் **-கோத்ரஸ்ய... ஸ்வர்ச்சிதம்** வரையுள்ள பித்ருக்களுக்கான மந்த்ரங்களைச் சொல்லி தர்ப்பங்களையும் எள்ளையும் வட்டமான மண்டலத்தில் சேர்க்க வேண்டும்.

## ६. (२) पादप्रक्षाळनम्

**उपवीती—**

विश्वदेवब्राह्मणं चतुरश्रमण्डलेऽवस्थाप्य अथवा आसने उपवेश्य—

...गोत्रस्य ... शर्मणः पितुः श्राद्धे विश्वे देवाः, स्वागतम् इति हस्ते अपः प्रदाय—

पवित्रं कर्णे कृत्वा, इदं वः पाद्यमिति पादयोः तीर्थं निनयति ।

**शुक्रमसि ज्योतिरसि तेजोऽसि**[तैत्तिरीयसंहिता १.१.१०.१७]

इति आज्यम्—

**गन्धद्वारां दुराधर्षां नित्यपुष्टां करीषिणीम् ।**

**ईश्वरीं सर्वभूतानां त्वामिहोपह्वये श्रियम् ॥**

[ऋग्वेदखिलम्. २.६.९.]

इति गोमयं चोपलिप्य,

**शं नो देवीरभीष्टये आपो भवन्तु पीतये ।**

**शं योरभि स्रवन्तु नः ॥** [ऋ. १०. ९. ४.]

इति शुद्धजलेन विश्वदेवपादौ आगुल्फं क्षालयित्वा, हस्तौ प्रक्षाल्य—

**प्राचीनावीती—**

पवित्रं धृत्वा वर्तुलमण्डले पितृब्राह्मणं अवस्थाप्य, अथवा उपवेश्य–

... गोत्रस्य ... शर्मणः पितुः श्राद्धे, ...गोत्राः...शर्माणः वसुरुद्रादित्यरूपाः अस्मत्पितृ-पितामह-प्रपितामहाः, स्वागतम् - इति हस्ते अपः प्रदाय—पवित्रं कर्णे कृत्वा–

इदं वः पाद्यं इति पादयोः तीर्थं निनयति ॥

शुक्रमसि ज्योतिरसि तेजोऽसि, इति आज्यम्—

गन्धद्वारां दुराधर्षां नित्यपुष्टां करीषिणीम् ।
ईश्वरीं सर्वभूतानां तामिहोप ह्वये श्रियम् ॥

इति गोमयं च पादयोः उपलिप्य—

समस्तसम्पत्समवाप्तिहेतवः समुत्थितापत्कुलधूमकेतवः ।
अपारसंसारसमुद्रसेतवः पुनन्तु मां ब्राह्मणपादपांसवः ॥

इति शुद्धजलेन ब्राह्मणपादौ आगुल्फं क्षालयित्वा, हस्तौ प्रक्षाल्य—

**उपवीती–**

पवित्रं धृत्वा, विष्णुं विश्वदेवमण्डलेऽवस्थाप्य, अथवा उपवेश्य -

...गोत्रस्य ... शर्मणः पितुः श्राद्धे श्राद्धसंरक्षकश्रीविष्णो स्वागतं - इति हस्ते जलं दत्वा, पवित्रं कर्णे निधाय–

विष्णो इदं ते पाद्यम् - इति तीर्थं पादयोः निनयति ॥

अथ, शुक्रमसि ज्योतिरसि तेजोऽसि - इति घृतम्—
गन्धद्वारां दुराधर्षां नित्यपुष्टां करीषिणीम् ।
ईश्वरीं सर्वभूतानां तामिहोप ह्वये श्रियम्—

इति पादयोः गोमयं चोपलिप्य—

**तद्विष्णोः परमं पदं सदा पश्यन्ति सूरयः । दिवीव चक्षुराततम् ।।**

**तद्विप्रासो विपन्यवो जागृवांसः समिन्धते । विष्णोर्यत्परमं पदम् ।।**

[ऋ. १. २२. २०-२१]

इति शुद्धोदकेन पादौ प्रक्षाल्य—

अथ कर्ता, स्वयं पादौ हस्तौ च प्रक्षाल्य, मण्डलस्य ईशान-देशे, द्विराचामेत् । कर्तुः आचमनात् अनन्तरम् मण्डलस्य पुरस्तात् विश्वे देवाः, तदुत्तरतः पितरश्च द्विः आचमनं कुर्युः । विश्वदेववत् विष्णुरपि आचामेत् ।

**ப்ரயோக விளக்கம்:-**

**6. (2) விச்வேதேவரின் பாத ப்ரக்ஷாளனம்.**

உபவீதியாக, விச்வேதேவரை சதுரச்ர மண்டலத்தில் நிற்கவோ உட்காரவோ வைத்து ..**கோத்ரஸ்ய...சர்மண:...ஸ்வாகதம்** என்கிற வரை சொல்லி இரண்டு கைகளாலும் தீர்த்தத்தை எடுத்து அவர் கையில் விடவும். பிறகு பவித்ரத்தைக் காதில் வைத்துக் கொண்டு கைகளில் தீர்த்தத்தை எடுத்து **இதம் வ: பாத்யம்** என்று விச்வே தேவரின் பாதங்களில் தீர்த்தம் சேர்க்கவும்.

'**சுக்ரமஸி** ..என்று சொல்லி நெய்யையும், **கந்தத்வாராம்...** என்று சொல்லி கோமயத்தையும் பாதங்களில் பூசி, **சம் நோ தேவீ:** என்று சொல்லி சுத்த தீர்த்தத்தைச் சேர்த்து ப்ராஹ்மணரின் பாதங்களை கணுக்கால் தொடங்கி விரல்கள் நுனிவரை கீழ்நோக்கி அலம்பவும்.

குறிப்பு:-

ப்ராஹ்மணர்களின் கணுக்கால்களுக்குமேல் உள்ள பகுதியில் கர்த்தாவின் கைபடுதல் கூடாது. கைபடாமல் ஜலம் சேர்க்கலாம். பாதப்ரக்ஷாளனஜலத்தை சிலர் சிரஸ்ஸில் ப்ரோக்ஷித்துக் கொள்கிறார்கள். அவ்விதம் செய்யலாகாது என அபிப்ராயம் இருக்கிறது. பாதப்ரக்ஷாளனம் செய்து விட்டு கர்த்தா கையை அலம்பிக்கொள்ள வேண்டும்.

**ப்ரயோக விளக்கம்:—**

**பித்ருப்ராஹ்மணரின் பாதப்ரக்ஷாளனம்.**

கர்த்தா பவித்ரத்தை தரித்து ப்ராசீனவீதியாக இருந்து கொண்டு வட்டமான மண்டலத்தில் பித்ரு ப்ராஹ்மணரை ஆஸனத்தில் உட்காரவோ நிற்கவோ வைத்து,...**கோத்ரஸ்ய...சர்மண: பிது: ச்ராத்தே கோத்ரா:...சர்மாண: வஸுருத்ராதித்யரூபா: பித்ரு பிதாமஹ ப்ரபிதாமஹா: ஸ்வாகதம்** என்று சொல்லி தீர்த்தத்தைக் கையில் கொடுத்து, பவித்ரத்தைக் காதில் வைத்துக் கொண்டு, **இதம் வ: பாத்யம்** என்று சொல்லி தீர்த்தத்தை பாதங்களில் சேர்க்கவும்.

**சுக்ரமஸி** என்று நெய்யையும். **கந்தத்வாராம்**. என்று கோமயத்தையும் பூசி, **ஸமஸ்தஸம்பத**...என்று சொல்லி சுத்தோதகத்தைச் சேர்த்து பாதத்தைக் கணுக்கால் தொடங்கி அலம்பி, கர்த்தா தனது கையை அலம்பிக் கொள்ளவேணும்.

**விஷ்ணுவின் பாதப்ராக்ஷளனம்**

உபவீதிபாக பவித்ரத்தைக் கைவிரலில் போட்டுக் கொண்டு, விச்வேதேவ மண்டலத்தில் விஷ்ணுவை நிற்கவோ உட்காரவோ செய்து,...**கோத்ரஸ்ய... சர்மண: பிது: ச்ராத்தே விஷ்ணோ ஸ்வாகதம்** என்று சொல்லி தீர்த்தத்தைக் கொடுத்து, பவித்ரத்தைக் காதில் வைத்துக் கொண்டு, **இதம் தே பாத்யம்** என்று சொல்லி பாதத்தில் தீர்த்தம் சேர்க்கவும்.

**சுக்ரமஸி** ..என்று நெய்யையும், **கந்தத்வாராம்**...என்று கோமயத்தையும் பூசி **தத்விஷ்ணோ:** என்று தொடங்கி **பரமம் பதம்** என்பது வரையுள்ள மந்த்ரங்களைச் சொல்லி விஷ்ணுவின் பாதங்களை கணுக்கால் தொடங்கி கீழே அலம்பவேண்டும்.

பிறகு கர்த்தா தன் கால்களையும் கைகளையும் வேறு ஜலத்தைக் கொண்டு அலம்பிக்கொண்டு மண்டலத்தின் வடகிழக்கில் உட்கார்ந்து இருமுறை ஆசமனம் செய்யவேண்டும்.

கர்த்தா ஆசமனம் செய்த பிறகு மண்டலத்திற்குக் கிழக்கில் விச்வேதேவரும், வடபுறத்தில் பித்ரு ப்ராஹ்மணரும் இருமுறை ஆசமனம் செய்யவேண்டும். விச்வேதேவர் போல் விஷ்ணுவும் மண்டலத்திற்குக் கிழக்கே ஆசமனம் செய்ய வேண்டும். கர்த்தா ஆசமனம் செய்வதற்கு முன் ஸ்வாமிகள் ஆசமனம் செய்யக்கூடாது.

**குறிப்பு** – ईशान्यां त्वाचमेत्कर्ता, देवाः प्राच्याम्, अथोत्तरे । पितरश्च... ।

[लघु-आश्वलायनस्मृतिः २३. १४.]

பாதப்ரக்ஷாளனம் செய்த தீர்த்தத்தை ப்ரோக்ஷித்துக் கொள்ளக் கூடாது என முன்பே கூறப்பட்டுள்ளது. பக்கம் 179 பார்க்க. ஆனால் இதை அனுஷ்டானத்தில் கொண்டவர்களுக்காக அதற்கான மந்த்ரங்கள் தரப்படுகின்றன.

**समस्तसम्पत्समवाप्तिहेतवः समुत्थितापत्कुलधूमकेतवः ।**
**अपारसंसारसमुद्रसेतवः पुनन्तु मां ब्राह्मणपादपांसवः ॥**
**आधिव्याधिहरं नृणां मृत्युदारिद्र्यनाशनम् ।**
**श्रीपुष्टिकीर्तिदं वन्दे विप्रश्रीपादपङ्कजम् ॥**
**विप्रौघदर्शनात् सद्यः क्षीयन्ते पापराशयः ।**
**वन्दनान्मङ्गलावाप्तिः अर्चनादच्युतं पदम् ॥**

**[मार्कण्डेयस्मृतिः, श्राद्धप्रकरणम्, पृ-१९२]**

**इति तत्तीर्थेन आत्मानं पत्नीं च प्रोक्षति ॥**

ஒவ்வொரு ப்ராஹ்மணரின் பாதப்ரக்ஷாளனம் முடிந்தவுடன் இந்த மந்த்ரங்களைச் சொல்லி ப்ரோக்ஷித்துக் கொள்ளுகின்றனர்.

## ७. अथ तृतीयं वरणम्

## ७. (१) विश्वेषां देवानां वरणं आवाहनं च

**उपवीती** — पवित्रं धृत्वा —

देवब्राह्मणहस्ते अपः प्रदाय— ...गोत्रस्य ...शर्मणः पितुः श्राद्धे विश्वदेवार्थे भवता क्षणः कर्तव्यः । ओम् तथा - इति प्रतिवचनम् । प्राप्नोतु भवान् । प्राप्नवानि - इति प्रतिवचनम् । इमे अक्षताः ॥

विश्वान् देवान् भवत्सु आवाहयिष्ये ।

ओम्, आवाहय - इति प्रतिवचनम् । अक्षतान् गृहीत्वा—

**विश्वे देवास आ गत शृणुता म इमं हवम् । एदं बर्हिर्नि षीदत ॥**

[ऋ. ६. ५२. ७.]

**विश्वे देवाः शृणुतेमं हवं मे ये अन्तरिक्षे ये उप द्यवि ष्ठ ॥**

**ये अग्निजिह्वा उत वा यजत्राः आसद्यास्मिन् बर्हिषि मादयध्वम् ॥**

[ऋ. ६. ५२. १३]

... गोत्रस्य ... शर्मणः पितुः श्राद्धे पुरुरवार्द्रवसंज्ञक—
विश्वान् देवान् भवत्सु आवाहयामि ।

पादादि मूर्धान्तं दक्षिणभागे अक्षतान् विकीर्य—

**आगच्छन्तु महाभागाः विश्वे देवा महाबलाः ।**
**ये अत्र विहिताः श्राद्धे सावधाना भवन्तु ते ॥**

**[आश्व. गृ. परिशिष्टम्. पृ. २३२. गरुडपुराणम्-२१८. ७.]**

इति विश्वदेवान् ध्यात्वा—

विश्वेषां देवानां इदमासनम् इति दर्भद्वयं दद्यात् ।

**ப்ரயோக விளக்கம்:—**

**7. (1) மூன்றும் வரணம், விச்வேதேவரின் வரணமும் ஆவாஹனமும்**

பவித்ரம் தரித்து உபவீதியாக, விச்வேதேவ ப்ராஹ்மணர் கையில் தீர்த்தம் சேர்த்து **கோத்ரஸ்ய,... கர்த்தவ்ய** என்று சொல்ல, அவர் **ஓம் ததா** என்பர். **ப்ராப்னோது** பவான் என, **ப்ராப்னவானி** என்றும், **விச்வான்......ஆவாஹயிஷ்யே** என, **ஆவாஹய** எனவும் பதில் சொல்வர். பிறகு அக்ஷதைகளை எடுத்துக் கொண்டு **விச்வேதேவாஸ:** என்று தொடங்கி **ஆவாஹயாமி** என்கிற வரை சொல்லி அவரது வலது பார்ச்வத்தில் அக்ஷதை

சேர்த்து **ஆகச்சந்து** என்பதால் விச்வே தேவர்களை த்யானித்து, **விச்வேஷாம்... ஆஸநம்** என்று இரண்டு தர்ப்பங்களை ஆஸனமாகத் தரவும்.

**குறிப்பு :–ஆகச்சந்து** என்பதை, **விச்வேதேவர்களின்** ஆவாஹனத்தில் சிலர் சொல்வர். **आगच्छन्तु...इत्युपस्थाय** என்பது **பரிசிஷ்டம். யே அத்ர விஹிதா:** என்பதற்குப் பதிலாக **யே யத்ர யோஜிதா:** என்ற பாடமும் இருக்கிறது. **யே சாத்ர** என்றும் பாடம் காணப் படுகிறது. **தக்ஷரின்** பெண் **விச்வா** என்பளுக்கு பிறந்த பத்து பிள்ளைகளுக்குப் பொதுப் பெயர் **விச்வே தேவா:** என்பது. இவர்கள் தபஸ் செய்து, ச்ராத்தங்களை ரக்ஷிக்கும் தேவதைகளாக இருக்கும் பெருமையைப் பெற்றனர். **புரூரவர், ஆர்த்ரவர்** என்ற இருவரும் **பார்வணம்** என்ற ச்ராத்தத்தில் தேவதைகள். மற்றவர்கள் வெவ்வேறு ச்ராத்தவகைகளில் தேவதைகளாக உள்ளனர். விச்வேதேவர்களின் பிறப்பு முதலான வரலாறு அறியாதவர்கள், **ஆகச்சந்து** என்ற ச்லோகத்தை ஆவாஹன மந்த்ரங்களைச்சொன்ன பிறகு சொல்ல வேண்டும் என்பர் **சங்க மஹர்ஷி.**

**नाम चैव तथोत्पत्तिं न विदुर्ये द्विजातय: ।**
**श्लोकमेतं पठेयुस्ते ब्राह्मणानां समीपगा: ॥**

**[शङ्खोक्तिरिति स्मृतिमुक्ताफलम्, श्राद्धकाण्डम् पृ. ७९७]**

**விச்வேதேவார்த்தே** என்று சொல்வது ஸம்ப்ரதாயம். 'அப்படிச் சொல்வது சரியில்லை. **விச்வதேவார்த்தே** என்று சொல்ல வேண்டும்' என்பது சிலர் கருத்து. இங்கு **விச்வதேவ** என்றும் தரப்பட்டுள்ளது. வெகு நாட்களாக வந்துள்ள ஸம்ப்ரதாய பாடத்தையும் அனுசரிக்கலாம். ஆபஸ்தம்ப க்ருஹ்யஸூத்ரவ்யாக்யாதா **ஸுதர்சனர் விச்வேதேவார்த்தே** என்றுதான் சொல்லியிருக்கிறார்.

## ७. (२) पितृणां वरणं आवाहनं च

**प्राचीनावीती—**

हस्ते अप: प्रदाय, तिलान् गृहीत्वा,—

. . . गोत्रस्य. . . शर्मण: पितु: श्राद्धे वसुरुद्रादित्यस्वरूप-पितृ-पितामह-प्रपितामहार्थे भवता क्षण: कर्तव्य: ।

ओम् तथा । प्राप्नोतु भवान् । प्राप्नवानि । इमे तिला: ॥

... गोत्रस्य... शर्मणः पितुः श्राद्धे ... गोत्रान्... शर्मणः ... वसुरुद्रादित्यरूपान् अस्मत्पितृपितामहप्रपितामहान् भवत्सु आवाहयिष्ये ।

ओम्, आवाहय । तिलान् गृहीत्वा—

**उशन्तस्त्वा नि धीमहि उशन्तः समिधीमहि ।**

**उशन् उशत आ वह पितॄन् हविषे अत्तवे ॥** [ऋ. १०.१६.१२]

... गोत्रस्य ... शर्मणः पितुः श्राद्धे ... गोत्रान्...शर्मणः वसुरुद्रादित्यस्वरूपान् अस्मत्पितृ-पितामह-प्रपितामहान् भवत्सु आवाहयामि ।

तिलान् मूर्धादि पादान्तं ब्राह्मणस्य वामभागे मूर्धनि अंसे जानुभागे - पादे च - विकीर्य—

**आ यन्तु नः पितरः सोम्यासः अग्निष्वात्ताः पथिभिर्देवयानैः ।**

**अस्मिन् यज्ञे स्वधया मदन्तु अधिब्रुवन्तु ते अवन्तु अस्मान् ॥**

इति पितॄन् ध्यात्वा— [वाज. सं.१९.५८]

... गोत्राणां ... शर्मणां ... स्वरूपाणां ... पितृपिता-मह-प्रपितामहानां इदं आसनम्—

इति द्विगुणत्रिदर्भभुग्नं दद्यात् । इदमर्चनम्-इमे तिलाः ॥

**ப்ரயோகவிளக்கம்**

**7. (2) பித்ருக்களின் வரணமும் ஆவாஹனமும்**

கர்த்தா **ப்ராசீநாவீதியாக** இருந்து கொண்டு பித்ருப்ராஹ்மணர் கையில் தீர்த்தம் சேர்த்தபின் எள்ளை எடுத்துக்கொண்டு, **கோத்ரஸ்ய...கர்த்தவ்ய:**—என, **ஓம் ததா** என பதிலைப் பெற்று—

**ப்ராப்னோது பவான்** என்பதற்கு **ப்ராப்னவானி** என பதிலைப் பெற்றவுடன், **இமே திலா:** என்று எள் சேர்க்க. பிறகு...**கோத்ரஸ்ய**... **ஆவாஹயிஷ்யே** என ப்ரார்த்தித்து, **ஆவாஹய** என அனுமதி கொடுத்தவுடன் எள்ளை எடுத்துக் கொண்டு, **உசந்த:... ஆவாஹயாமி** என்று சொல்லி எள்ளை ஸ்வாமியின் திருமேனியில் இடது பக்கத்தில் தலையிலிருந்து பாதம் வரை சேர்த்து, **ஆயந்து...ஆஸநம்** என்பது வரை சொல்லி த்யானித்து, மடக்கப்பட்ட மூன்று தர்ப்ப புல்லைத்தை ஆஸனமாகக் கொடுத்து, **இதமர்ச்சனம்** என்று எள்ளைச் சேர்க்கவேண்டும்.

**குறிப்பு : உசந்த:** என்பதை மூன்று தடவை சொல்லவேண்டும் என்பர் சிலர். **ஆயந்து** என்பதில் **மதந்த:** என்பது சுக்லயஜுர் வேதபாடம். **மதந்து** என்பது ரிக்வேதிகளின் பாடம். **உசந்த:** என்பதால் ஆவாஹனம் செய்து, **ஆயந்து** என்பதால் பித்ருக்களின் அருகில் பங்க்தியுடன் நிற்கவேண்டும் என்பர் **பரிசிஷ்டகாரர்.**
'आयन्तु नः पितरः सोम्यासः इत्युपस्थाय' - [परिशिष्टम्. पृ. २३३.]

## ७. (३) विष्णोः वरणं आवाहनं च

उपवीती—

हस्ते अपः प्रदाय—

. . . गोत्रस्य . . . . शर्मणः श्राद्धे श्राद्धसंरक्षकश्री—विष्णवर्थे भवता क्षणः कर्तव्यः ।

ओम्, तथा । प्राप्नोतु भवान्—प्राप्नवानि । इमे अक्षताः ॥

. . . गोत्रस्य . . . शर्मणः पितुः श्राद्धे श्राद्धसंरक्षक-श्रीमहाविष्णुं भवत्सु आवाहयिष्ये । ओम् , आवाहय । अक्षतान् गृहीत्वा—

**सहस्रशीर्षा पुरुषः सहस्राक्षः सहस्रपात् ।**

**स भूमिं विश्वतो वृत्वा अत्यतिष्ठद्दशाङ्गुलम् ॥**

[ऋ. १०. ९०. १.]

. . . गोत्रस्य . . . शर्मणः पितुः श्राद्धे श्राद्धसंरक्षक— श्रीमहाविष्णुं भवत्सु आवाहयामि । अक्षतान् समर्प्य— विष्णो इदं ते आसनम्— इति ऋजुदर्भद्वयं दद्यात् । इदमर्चनम्— इमे अक्षताः ॥

**ப்ரயோக விளக்கம்**

### 7. (3) விஷ்ணு வரணமும் ஆவாஹனமும்:

கர்த்தா **உபவீதியாக** இருந்து விஷ்ணு ப்ராஹ்மணர் கையில் தீர்த்தம் கொடுத்து...**கோத்ரஸ்ய...கர்த்தவ்ய:** என்று சொல்ல, **ஓம், ததா** என்றும், **ப்ராப்னோது பவான்** என, **ப்ராளவாளி** என்றும் பதில்;..**கோத்ரஸ்ய...ஆவாஹயிஷ்யே** என,**ஆவாஹய** என்பது பதில். அக்ஷதையைக் கையில் எடுத்து, **ஸஹஸ்ர ...ஆவாஹயாமி** என்று சொல்லி அக்ஷதை சேர்க்க. **விஷ்ணோ இதம் தே ஆஸநம்** என தர்ப்பம் கொடுத்து, **இமே அக்ஷதா:** என அக்ஷதை சேர்க்கவேண்டும்.

**இதம் வ: (தே) விஷ்டராஸனம்** என்று சொல்லி ஆஸநம் தரும் முறையும் இருக்கிறது.

### ८. अर्घ्यग्रहणम् (१) विश्वेषां देवानां कृते

**उपवीती—**

प्राणानायम्य, अद्य पूर्वोक्त . . . अस्यां . . , पुण्यतिथौ . . . गोत्रस्य . . . शर्मणः पितुः श्राद्धे . . . गोत्राणां . . . शर्मणां . . . स्वरूपाणां अस्मत्पितृ - पितामह - प्रपितामहानां अक्षय्यतृप्त्यर्थं अर्घ्यग्रहणम् करिष्ये । कुरुष्व - इति प्रतिवचनम् ।

अग्नेः दक्षिणतः भुवं प्रोक्ष्य, सकृदाच्छिन्नानां पश्चात् उदगग्रान् दर्भान् आस्तीर्य, तेषु विश्वदेवार्थं उत्तरापवर्गं पात्रद्वयम् न्यङ्निधाय—

तत्पश्चात् दक्षिणाग्रान् (प्राग्दक्षिणाग्रान् वा) दर्भानास्तीर्य तेषु पित्रर्थं न्यग्बिलं पात्रत्रयं निधाय—

तदुत्तरतः प्रागग्रान् दर्भानास्तीर्य तेषु विष्ण्वर्थं पात्रमेकं न्यङ्निधाय—

विश्वदेवपात्रद्वयमुत्तानं कृत्वा, उदगग्रं द्विदर्भपवित्रं प्रतिपात्रमन्तर्धाय, पात्रयोः गन्धोदकमासिच्य—

शं नो देवीरभिष्टये आपो भवन्तु पीतये। शं योरभि स्रवन्तु नः॥

इति पात्रद्वयस्थं जलं सकृत् अनुमन्त्र्य—

यवोऽसि धान्यराजोऽसि वारुणो मधुसंयुतः।
निर्णोदः सर्वपापानां पवित्रं ऋषिभिः स्मृतम्॥

[परिशिष्टम् पृ. २३२. विष्णुस्मृतिः- ४८. १७]

इति प्रतिपात्रं मन्त्रमावृत्य यवान् ओप्य गन्धान् पुष्पाणि तुलसीदलानि च प्रक्षिप्य, औदुम्बरपत्रपुटेन उदगग्रेणाच्छाद्य दर्भैः उदगग्रैः प्रच्छादय—

'देवपात्रे सुसम्पन्ने ?' - इति विश्वदेवब्राह्मणं पृच्छेत्।

सुसम्पन्ने - इति प्रतिवचनम्। पुरूरवार्द्रवसंज्ञकविश्वे—देवाः, स्वाहा - अर्घ्याः- इति त्रिः उक्त्वा कर्ता निवेदयेत्। 'सन्तु अर्घ्याः'- इति त्रिः देवब्राह्मणप्रतिवचनम्॥

**ப்ரயோக விளக்கம்:—**

**8. (1) விச்வேதேவர்களுக்காக அர்க்யம் க்ரஹித்தல்**

கர்த்தா **உபவீதியாக** ப்ராணாயாமம் செய்து, **அத்யபூர்வோக்த... கரிஷ்யே** வரை சொல்லி அக்னிக்குத் தெற்கில் ஸக்ருதாச்சின்ன தர்ப்பங்களுக்கு மேற்கில் வடக்கு நுனியாக தர்ப்பங்களைப் போட்டு அவற்றின்மேல் விச்வேதேவர்க்காக இரண்டு பாத்ரங்களை (தொன்னைகளை) கவிழ்த்துவைத்து, இதற்கு மேற்புறத்தில் தெற்கு அல்லது தென்கிழக்கு நுனியாக தர்ப்பங்களைப் போட்டு அவற்றின் மேல், பித்ருக்களுக்காக மூன்று பாத்ரங்களைக் கவிழ்த்து வைத்து, இதற்கும் வடக்கில், கிழக்கு நுனியாக தர்ப்பங்களைப் போட்டு அதில் விஷ்ணுவிற்காக ஒரு பாத்ரத்தைக் கவிழ்த்து வைத்து,

விச்வேதேவ பாத்ரங்களை நிமிர்த்தி, கூர்ச்ச ஜலத்தினால் ப்ரோக்ஷித்து அவற்றில் வடக்கு நுனியாக இரண்டு பவித்ரங்களை வைத்து சந்தனம் சேர்த்த தீர்த்தத்தை அவற்றில் விட்டு, **சம் நோ தேவீ:** என்ற மந்த்ரத்தை ஒருமுறை சொல்லிக் கொண்டே இரண்டு பாத்ரங்களையும் ஸ்பர்சித்து அனுமந்த்ரணம் செய்து, **யவோஸி** என்பதைச் சொல்லி அக்ஷதை சேர்த்து (ஒவ்வொரு பாத்ரத்தில் போடும் போதும் மந்த்ரம் சொல்லப்பட வேண்டும்) மந்த்ரமின்றி சந்தனம், புஷ்பம், துளஸீதளங்களைச் சேர்த்து, வடக்கு நுனியுடைய இரண்டு அத்தி இலைகளால் (அல்லது பலாச இலைகளால்) மூடி வடக்கு நுனியான தர்ப்பங்களை அவற்றின் மேல் வைத்து, **தேவ பாத்ரே ஸம்பன்னே**? என்று கேட்க, தேவப்ராஹ்மணர் **ஸுஸம்பன்னே** என்று பதில் தருவர். பிறகு **ஸ்வாஹா அர்க்யா:** என்று அர்க்யம் ஸித்தமானதை மும்முறை கூறித் தெரிவிக்க வேண்டும். **ஸந்து அர்க்யா:** என்பது ப்ராஹ்மணர் தரும் பதில்.

**குறிப்பு:—அர்க்யம்** என்பது, பெரியோர்களுக்கு மரியாதை செய்வதற்காக சந்தனம் புஷ்பம் முதலியன சேர்த்துத் தரப்படும் தீர்த்தம். இங்கு பித்ருக்களுக்கும் விச்வேதேவர், விஷ்ணு இவர்களுக்கும் தரப்படுவதற்காக மந்த்ரபூர்வகம் ஸித்தம் செய்யப்படுகிறது. ஆச்வலாயனர் பித்ருக்களுக்குத் தரவேண்டியதை மாத்ரமே குறிப்பிட்டிருக்கிறார். வேறு ஸ்ம்ருதிகளில் விச்வேதேவர்க்கும் விஷ்ணுவிற்கும் தரப்படுவது விளக்கப்பட்டிருக்கிறது. அர்த்த ஜ்ஞானத்துடன் மந்த்ரத்தைச் சொல்லி கர்மாவை நினைத்தல் **அனுமந்த்ரணம்** எனப்படும்.

பாத்ரங்களை வைப்பதற்காக தர்ப்பம் இடுவதை ஆச்வலாயனர் சொல்லவில்லை. **பரிசிஷ்டகாரர்** அக்னிக்கு தெற்கில் கிழக்கு நோக்கி விச்வேதேவருக்கும், தெற்கு நோக்கி பித்ருக்களுக்கும் தர்ப்பம் போடச் சொல்லியிருக்கிறார். விஷ்ணுவைப் பற்றிக் கூறவில்லை. விச்வேதேவருக்குத் தயார் செய்வதுடனேயே விஷ்ணுவிற்கும் சேர்த்து அர்க்யம் தயார் செய்யும்படி கூறிய **முத்து தீக்ஷிதர்** விச்வேதேவருக்குக் கிழக்கு நோக்கியும், பித்ருக்களுக்குத் தென் கிழக்கு நோக்கியும் முனை இருக்கும்படி தர்ப்பங்களைப் போடச் சொல்கிறார்.

வேறு சிலர், கர்த்தாவிற்குமுன், அக்னிக்குத் தென்புறத்தில்' வடக்கு நோக்கி விச்வேதேவர்க்கும், இதற்குக்கிழக்கில் தெற்கு நோக்கி பித்ருக்களுக்கும், இதற்கும் கிழக்கில் விஷ்ணுவிற்கு வடக்கு நோக்கியும் தர்ப்பம் போடுகின்றனர். இங்கு ப்ரயோகத்தில் கூறியிருப்பது எங்கள் முன்னோர்களின் ஓலைச்சுவடியில் குறிப்பிடப்பட்டுள்ள முறையாகும்.

தேவ கார்யத்தை வடக்கு அல்லது கிழக்கு நோக்கியும், பித்ரு கார்யங்களைத் தெற்கு அல்லது தென்கிழக்கு நோக்கியும் செய்ய வேண்டும் என்று பொதுவான விதியிருப்பதால் மஹர்ஷி தர்ப்பம் போடுவதைப் பற்றித் தனியே சொல்லவில்லை.

க்ருஹஸ்தர்கள் தம் தமது ஸம்ப்ரதாயத்தை அனுசரிக்கலாம்.

**अप आसिच्य शं नो देवीरभिष्टये इत्यनुमन्त्रितासु**

என்று, ஸூத்ரம் (4-7-8) அனுமந்த்ரணம் செய்யச் சொல்வதால், தீர்த்தம் சேர்க்க இம்மந்த்ரத்தை உபயோகிப்பது சரியில்லை.

பாத்ரம் வைக்கப்போடப்பட்டுள்ள தர்ப்பத்தின் முனை எத்திசை நோக்கியிருக்கிறதோ அத்திசை நோக்கி பவித்ரத்தின் முனை இருக்கும்படி பவித்ரத்தைப் பாத்ரத்தில் வைக்க வேண்டும். தென்னாட்டில் யவம் கிடைக்காததால் அரிசியைச் சேர்க்கிறார்கள். சந்தனம் புஷ்பம் சேர்க்க மந்த்ரமில்லை. ஆனால் சிலர், **கந்தத்வாராம்** என்பதைச் சொல்லி சந்தனத்தையும்,

**आयने ते परायणे दूर्वा रोहन्तु पुष्पिणी: ।**
**ह्रदाश्च पुण्डरीकाणि समुद्रस्य गृहा इमे ॥** [ऋ. १०. १४२. ८]

என்பதைச் சொல்லி புஷ்பம் துளஸீதளம் இரண்டையும் சேர்க்கின்றனர்.

பவித்ரத்தின் முனை எத்திசை நோக்கியிருக்கிறதோ அத்திசை நோக்கியதாக முனை இருக்கும்படி அத்தி இலையும் தர்ப்பமும் வைக்கப்படவேண்டும்.

அர்க்யத்தை க்ரஹிப்பது முதல் கொடுத்துமுடிக்கும் வரை கர்த்தா **உபவீதியாக** இருக்க வேண்டும் என்பர் நாராயணர். **उपवीत्येवार्घ्यं प्रयच्छेत्** என்பது (பக்கம் 182) அவர் வாக்யம்.

பாத்ரங்களில் தீர்த்தம் சேர்த்தவுடன்...

**கோத்ரஸ்ய.. சர்மண: ச்ராத்தே புரூரவார்த்ரவஸிச்வேதேவேப்ய: விஷ்ணவே ச அபோ வோ க்ருஹ்ணாமி** என்பதும், இதேபோல்... ...

**அஸ்மத் பித்ருபிதாமஹப்ரபிதாமஹேப்ய: அபோ வோ க்ருஹ்ணாமி** என்று பித்ருக்களுக்கு அர்க்யம் சேர்க்கும்போது கூறுவதும் ஸ்மார்த்தர்களின் அனுஷ்டானத்தில் உள்ளது. முதலிலேயே அர்க்யம் க்ரஹிப்பதற்காக ஸங்கல்பம் செய்து ப்ரார்த்தித்து அனுமதி பெற்றிருப்பவர்கள் **அபோ வோ க்ருஹ்ணாமி** என்று சொல்லத் தேவையில்லை. ஸங்கல்பம் செய்யாவிட்டால் இதைச் சொல்லலாம்.

## ८. (२) पितॄणां अर्घ्यग्रहणम्

**प्राचीनावीती—**

पितृपात्राणि त्रीणि उत्तानानि कृत्वा कूर्चजलेन प्रोक्ष्य, प्रतिपात्रं त्रिदर्भपवित्रं दक्षिणाग्रं अन्तर्धाय गन्धोदकमासिच्य–

शं नो देवीरभिष्टये आपो भवन्तु पीतये। शं योरभि स्रवन्तु नः॥

इति सकृदुक्त्वा पात्रत्रयस्थं जलं अनुमन्त्र्य—

तिलोऽसि सोमदेवत्यः गोसवे देवनिर्मितः।
प्रत्नवद्भिः प्रत्तः स्वधया पितॄनिमान् लोकान् प्रीणयाहि नः स्वधा नमः॥ [आश्व. गृ. सू. ४. ७. ८.]

इति प्रतिपात्रं मन्त्रमावृत्य पृथक् तिलान् प्रक्षिप्य गन्धान् पुष्पाणि तुलसीदलानि च प्रास्य- दक्षिणाग्रैः औदुम्बरपत्रैराच्छाद्य, दक्षिणाग्रैः दर्भैः प्रच्छाद्य–

पितृपात्राणि सम्पन्नानि? - इति पितृब्राह्मणम् पृच्छेत्। सुसम्पन्नानि - इति प्रतिवचनम्॥

वसुरुद्रादित्यस्वरूपाः अस्मत्पितृ - पितामह - प्रपितमहाः, स्वधा अर्घ्याः - इति त्रिः उक्त्वा कर्ता (अर्घ्यस्य सिद्धतां) नवेदयेत्। सन्त्वर्घ्याः - इति प्रतिवचनम् - त्रिः॥

**ப்ரயோக விளக்கம் :**

### 8. (2) பித்ருக்களுக்காக அர்க்யம் க்ரஹித்தல்

கர்த்தா **ப்ராசீனுவீதியாக,** பித்ருபாத்ரங்களை நிமிர்த்தி கூர்ச்ச ஜலத்தினுல் ப்ரோக்ஷித்து மூன்று தர்ப்பங்களாலான பவித்ரங்களை ஒவ்வொன்றிலும் தெற்கு நுனியாக வைத்து, ஜலம் சேர்த்து **சம்னோ தேவீ:** என்பதால் **அனுமந்த்ரணம்** செய்து, **திலோஸி** என்பதைச் சொல்லி எள்சேர்த்து(ஒவ்வொரு பாத்ரத்தில் எள் போடும் போதும்

மந்த்ரம் சொல்லப்பட வேண்டும்) சந்தனம் புஷ்பம் துளஸீ இவை களையும் மந்த்ரமின்றிச் சேர்த்து, தெற்கு நோக்கி முனையுள்ள அத்தி இலையாலும் தர்ப்பத்தாலும் மூடி, **பித்ருபாத்ராணி ஸம்பன்னானி** எனக்கேட்டு, **ஸுஸம்பன்னானி** என்ற ப்ரதிவசனம் பெற்று, **வஸு...** **ப்ரபிதாமஹா: ஸ்வதா அர்க்யா:** என்று மூன்று தடவை சொல்லி **அர்க்யம்** ஸித்தமாயிருப்பதைத் தெரிவிக்க, பித்ரு ப்ராஹ்மணர், **ஸந்து அர்க்யா.** என்று மூன்று முறை கூறி அதை அனுமதிப்பர்.

**குறிப்பு** :—பித்ருக்களுக்கு அர்க்யம் க்ரஹிக்கும்போது ப்ராசீனா வீதம் செய்து கொள்ள வேண்டாமென்பது பலர் கருத்து. **பித்ரு** பாத்ரத்தை கர்த்தாவின் அருகில் வைத்து, அதற்குத் தெற்கில் **பிதாமஹ பாத்ரம்**—அதற்கு அடுத்து **ப்ரபிதாமஹபாத்ரம்** என்கிற க்ரமத்தில் வைக்க வேண்டும். **யவோஸி** என்ற மந்த்ரத்தால் பிதாமஹ பாத்ரத்தில் எள்ளைப் போடும்போது **பித்ரூன்** என்பதற்குப் பதிலாக, **பிதாமஹான்** என்றும், ப்ரபிதாமஹ பாத்ரத்தில் போடும் போது **ப்ரபிதாமஹான்** என்றும் பதங்களை மாற்றிச் சொல்லவேண் டும் என்று சிலர் அபிப்ராயப்படுகிறார்கள். **பித்ரூன்** என்பதே பிதாமஹ ப்ரபிதாமஹர்களையும் குறிக்குமாதலால் **பித்ரு** பதத்தை மாற்றக் கூடாது என்பது வ்யாக்யானகாரர்களின் அபிப்ராயம்.

**पितृशब्दस्य ऊहः नास्ति इत्युक्तम् प्राक् ॥**

நாராயண வ்யாக்யானம் ஆச்வ. க்ருஹ்ய. 4-7-8. பக்கம். 181

மாத்ருச்ராத்தத்திலும் **பித்ரூன்** என்பதற்குப் பதிலாக **மாத்ரூ:** என்ற ஊஹம் (மாறுதல்) இல்லை என்பர். **यथा तत्र गौण्या लक्षणया वा अन्यथा वा स्त्रीन् आह तथैव अत्रापि मातॄ अभिदध्यात। तेनोहो न कार्यः।** **नारायणव्याख्या** 3.5.8. பக்கம் 105.

## ८. (३) विष्णोः अर्घ्यग्रहणम्

उपवीती—

विष्णुपात्रं उत्तानं कृत्वा कूर्चजलेन प्रोक्ष्य—

द्विदर्भपवित्रं प्रागग्रं अन्तर्धाय, जलमासिच्य--

शं नो देवीरभिष्टये आपो भवन्तु पीतये । शं योरभि स्रवन्तु नः ॥

इति अनुमन्त्र्य–

यवोऽसि धान्यराजोऽसि वारुणो मधुसंयुतः ।

निर्णोदः सर्वपापानां पवित्रं ऋषिभिः स्मृतम् ॥

इति यवान् प्रास्य, गन्धान् पुष्पाणि तुलसीदलानि च प्रक्षिप्य, प्रागग्रेण औदुम्बरपत्रेण आच्छाद्य, प्रागग्रैः दर्भैः प्रच्छाद्य–

विष्णुपात्रं संपन्नम्? इति विष्णुं पृच्छेत्। सुसम्पन्नम् इति प्रतिवचनम्। श्रीमहाविष्णो, स्वाहा अर्घ्याः- इति त्रिः कर्ता वदेत्। सन्त्वर्घ्याः- इति विष्णोः त्रिः प्रतिवचनम्॥

**ப்ரயோக விளக்கம்** :

**8. (3) விஷ்ணுவிற்கு அர்க்யம் க்ரஹித்தல்**

**உபவீதியாக, கர்த்தா**, விஷ்ணு பாத்ரத்தை நிமிர்த்தி ப்ரோக்ஷித்து இரண்டு தர்ப்பங்களாலான பவித்ரத்தைக் கிழக்கு நுனியாக அதில் வைத்து, தீர்த்தம் சேர்த்து, **சம் நோ தேவீ:** என அனுமந்த்ரித்து, **யவோஸி** என யவத்தையும், சந்தனம், புஷ்பம் துளஸீதளம் இவற்றையும் சேர்த்துக் கிழக்கு நுனியான அத்தி இலை தர்ப்பம் இவற்றால் மூடி, **விஷ்ணு பாத்ரம் ஸம்பன்னம்**? என்று கேட்க, **ஸுஸம்பன்னம்** என்று பதில் தருவர். **ஸ்வாஹா அர்க்யா:** என்று தெரிவிக்க, **ஸந்து அர்க்யா:** என்பது பதில்.

**குறிப்பு**: விஷ்ணுவிற்காக ப்ராஹ்மணர் வரிக்கப்படா விட்டால் அர்க்யம் தயார் செய்யத் தேவையில்லை. விச்வே தேவருக்காக ப்ராஹ்மணர் கிடைக்கா விட்டாலும் கூர்ச்சத்தில் விச்வேதேவரை ஆவாஹனம் செய்து அர்க்ய க்ரஹணம் முதலியன எல்லாம் செய்யப் பட வேண்டும்.

**९. (१) अर्घ्यदानम् (विश्वेभ्यो देवेभ्यः)**

**उपवीती—**

विश्वेदेवहस्ते शुद्धोदकं दत्वा—

विश्वदेवपात्रयोः, दक्षिणपात्रस्थं पवित्रमादाय, ब्राह्मणहस्ते उदगग्रं निधाय—

औदुम्बरपर्णेन अर्घ्यतीर्थं गृहीत्वा—

...गोत्रस्य ..., शर्मणः ... रूपस्य पितुः श्राद्धे पुरूरवसंज्ञक-विश्वेदेवाः इदं वः अर्घ्यं इति उक्त्वा,

अस्त्वर्घ्यम् इति प्रतिवचने दत्ते अर्घ्यं हस्ते दत्वा-दक्षिणपाणिना ब्राह्मणस्य हस्तं स्पृशन् अथवा अपिधाय—

या दिव्या आपः पृथिवी संबभूवुः या अन्तरिक्ष्याः उत पार्थिवीर्याः। हिरण्यवर्णाः यज्ञियाः ता न आपः शं स्योना भवन्तु ॥
[आश्व-गृ-सू-४-७-१३]

इत्यनुमन्त्र्य, पुनः शुद्धोदकं दत्वा, पवित्रं आदाय पात्रे निधाय, औदुम्बरपर्णेन आच्छाद्य-

पुनश्च विश्वेदेवहस्ते शुद्धोदकं दत्वा, इतरस्मात् विश्वेदेवपात्रात् पवित्रमादाय, ब्राह्मणहस्ते निधाय, औदुम्बरपर्णेन अर्घ्यं गृहीत्वा,

... गोत्रस्य ... शर्मणः...रूपस्य पितुः श्राद्धे, आर्द्रवसंज्ञकविश्वेदेवाः इदं वोऽर्घ्यं इति उक्त्वा, अस्तु अर्घ्यं इति प्रतिवचने दत्ते, अर्घ्यं हस्ते दत्वा—

या दिव्या आपः पृथिवी संबभूवुः या अन्तरिक्ष्याः उत पार्थिवीर्याः। हिरण्यवर्णाः यज्ञियाः ता न आपः शं स्योना भवन्तु ॥

इति अनुमन्त्र्य, पुनः शुद्धोदकं दत्वा, पवित्रमादाय विश्वेदेवपात्रे निधाय, औदुम्बरपर्णेन पिधाय, दर्भैः प्रच्छादयेत् ।

**देवेभ्यः स्थानमसि** इति अक्षतान् पात्रोपरि विकिरेत् । अथवा पात्रद्वयं स्पृशेत् ॥

**ப்ரயோக விளக்கம்.—**

### 9. (1) விச்வேதேவருக்கு அர்க்யதானம்

கர்த்தா உபவீதியாக, இருந்து கொண்டு விச்வேதேவப்ராஹ்மணரின் வலது கையில் உத்தரிணியாலோ கூர்ச்சத்தாலோ, சுத்தோதகம் கொடுத்து, விச்வேதேவ பாத்ரம் இரண்டில் தென்புறம் இருக்

கும் பாத்ரத்திலிருந்து, பவித்ரத்தை எடுத்து ப்ராஹ்மணரின் கையில் வடக்கு முனையாக வைத்து, அத்தி இலையினுல் தொன்னையிலிருந்து அர்க்ய ஜலத்தை எடுத்து,

**...கோத்ரஸ்ய...சர்மண:...ரூபஸ்ய...பிது: ச்ராத்தே... இதம் வ: அர்க்யம்** என்று சொல்ல, **அஸ்த்வர்க்யம்** என்று பதில் சொன்ன பிறகு, தீர்த்தத்தைக் கையில் சேர்த்து, கர்த்தா தனது இடது கையினுல், ப்ராஹ்மணரின் கையைத் தாங்கிக் கொண்டு, தனது வலது கையைக் கவிழ்த்து மூடி, **யா: திவ்யா: ... பவந்து** என்கிற வரை மந்த்ரத்தைச் சொல்லி, **அனுமந்த்ரணம்** செய்து, மறுபடியும் சுத்த ஜலம் கொடுத்து, பவித்ரத்தை எடுத்து, எடுத்த பாத்ரத்தில் வடக்கு நுனியாக வைத்து, அத்தி இலையால் மூடி,

மறுபடியும் விச்வேதேவ ப்ராஹ்மணரின் கையில் சுத்தோதகம் கொடுத்து, மற்றொரு விச்வே தேவபாத்ரத்திலிருந்து பவித்ரத்தை எடுத்து. ப்ராஹ்மணர் கையில் வைத்து, அத்தி இலையால் அர்க்ய ஜலத்தை எடுத்து,.. **கோத்ரஸ்ய ..அர்க்யம்** என்று சொல்ல, **அஸ்து அர்க்யம்** என்று பதில் கிடைத்ததும், தீர்த்தத்தைக் கையில் சேர்த்து **யா திவ்யா ஆப**:... என்கிற மந்த்ரத்தால் முன்போல் அனுமந்த்ரணம் செய்து மறுபடியும் ப்ராஹ்மணர் கையில் சுத்தோதகம் கொடுத்து, பவித்ரத்தை எடுத்து பாத்ரத்தில் வைத்து, அத்தி இலையினுல் மூடி இரண்டு தர்ப்பங்களை இரண்டு பாத்ரங்களின் மேல் இருக்கும்படி வைக்கவும்.

**தேவேப்ய : ஸ்தானமஸி** என்று சொல்லி இரண்டு பாத்ரங்களின் மேலும் அக்ஷதை சேர்க்கவும்; அல்லது தொடவும்.

**குறிப்பு :** விச்வேதேவருக்குக் கொடுத்தபின் மிச்சமுள்ள அர்க்ய ஜலத்தை,

**ये देवासः दिव्येकादश स्थ पृथिव्यामधि एकादश स्थ ।**

**अप्सुक्षितो महिनैकादश स्थ ते देवासः यज्ञमिमं जुषध्वम् ॥**

**[ऋ. १. १३९. ११.]**

என்கிற மந்த்ரத்தைச் சொல்லி, விச்வேதேவருக்கு பாதப் ரக்ஷாளனம் செய்த மண்டலத்தில் சேர்த்து, **தேவேப்ய: ஸ்தானமஸி** என்று சொல்லி அந்த இடத்தில் அக்ஷதையைச் சேர்ப்பது சிலருடைய ஸம்ப்ரதாயம்.

**देवेभ्यः स्थानमसि इति न्युब्जं उत्तानं वा कार्यम् इति गरुडपुराणे उक्तम् इति निर्णयसिन्धुः ।** (பக்கம். 1539)

விச்வேதேவ பாத்ரத்தைக் கவிழ்த்தோ நிமிர்த்தியோ வைக்க லாம் என கருட புராணம் கூறும்.

**யா திவ்யா:** என்பது ஸூத்ரமந்த்ரமாதலால் ஸ்வரம் தேவை இல்லை.

முதல் அர்க்யத்தை புரூரவர் என்ற தேவருக்கும், இரண்டாவது அர்க்யத்தை ஆர்த்ரவர் என்கிற தேவருக்கும் தனித்தனியே தராமல் இரண்டு தேவர்களின் பெயர்களை ஒவ்வொரு ஸமயமும் கூறி இருமுறை தரும் வழக்கமும் உள்ளது.

**யா திவ்யா :** என்ற இந்த மந்த்ரம் சிறிது மாறுதலுடன் **தைத்திரீய ப்ராஹ்மணத்தில்** (3-1-2) காணப்படுகிறது. மாறுதலின்றி **அக்னி புராணத்திலும்** (117-14) உள்ளது.

## ९. (२) पितृभ्योऽर्घ्यदानम्

## पित्रे अर्घ्यदानम्

पितृहस्ते शुद्धोदकं दत्त्वा, पितृपात्रात् पवित्रमादाय, पितृब्राह्मणहस्ते दक्षिणाग्रं निधाय, औदुम्बरपर्णेन अर्घ्यमादाय,

. . . गोत्रस्य . . . शर्मणः . . . रूपस्य पितुः श्राद्धे . . . . गोत्र . . . शर्मन् . . . वसुरूपपितः, इदं ते अर्घ्यम् इति निवेद्य,

अस्त्वर्घ्यं इति प्रतिवचने दत्ते, सव्योपगृहीतेन दक्षिणेन पाणिना, पितृतीर्थेन अर्घ्यतीर्थं हस्ते दत्त्वा—

या दिव्या आपः पृथिवी संबभूवुः या अन्तरिक्ष्याः उत पार्थिवीर्याः ।
हिरण्यवर्णाः यज्ञियाः ता न आपः शं स्योना भवन्तु ॥

इति मन्त्रेण अनुमन्त्र्य, शुद्धोदकं दत्त्वा, पवित्रमादाय, पितृपात्रे दक्षिणाग्रं निधाय, औदुम्बरपर्णेन आच्छाद्य—

## पितामहाय अर्घ्यदानम्

पितामहहस्ते शुद्धोदकं दत्त्वा, पितामहपात्रात् पवित्रमादाय, हस्ते दक्षिणाग्रं निधाय, औदुम्बरपर्णेन अर्घ्यमादाय,

... गोत्रस्य ... शर्मणः ... रूपस्य पितुः श्राद्धे ... गोत्र ... शर्मन् रुद्ररूपपितामह, इदं ते अर्घ्यम् इति निवेद्य,

अस्तु अर्घ्यम् इति प्रतिवचने दत्ते, अर्घ्यं हस्ते दत्त्वा—
या दिव्या आपः पृथिवी संबभूवुः या अन्तरिक्ष्याः उत पार्थिवीर्याः।
हिरण्यवर्णाः यज्ञियाः ता न आपः शं स्योना भवन्तु ॥

इति मन्त्रेण अनुमन्त्र्य, शुद्धोदकं दत्वा, पवित्रमादाय, पितामहपात्रे दक्षिणाग्रं निधाय, औदुम्बरपर्णेन पिधाय—

## प्रपितामहाय अर्घ्यदानम्

प्रपितामहहस्ते शुद्धोदकं दत्त्वा, प्रपितामहपात्रात् पवित्रमादाय, हस्ते दक्षिणाग्रं निधाय, औदुम्बरपर्णेन अर्घ्यं गृहीत्वा—

... गोत्रस्य ... शर्मणः ... रूपस्य पितुः श्राद्धे ... गोत्र ... शर्मन् आदित्यरूपप्रपितामह - इदं ते अर्घ्यम् इति निवेद्य,— अस्तु अर्घ्यम् इति प्रतिवचने दत्ते, अर्घ्यं हस्ते दत्त्वा
या दिव्या आपः पृथिवी संबभूवुः या अन्तरिक्ष्याः उत पार्थिवीर्याः।
हिरण्यवर्णाः यज्ञियास्ता न आपः शं स्योना भवन्तु ॥

इति अनुमन्त्र्य, पुनः शुद्धोदकं दत्वा, प्रपितामहपात्रे दक्षिणाग्रं निदधीत—

**ப்ரயோக விளக்கம் :**

### 9. (2) பித்ருக்களுக்கு அர்க்யதானம்

*பித்ருப்ராஹ்மணர் ஹஸ்தத்தில் சுத்தோதகம் கொடுத்து பித்ரு பாத்ரத்திலிருந்து பவித்ரத்தை எடுத்து, ப்ராஹ்மணர்கையில் தெற்கு நுனியாக வைத்து, அத்தி இலையால் அர்க்ய ஜலத்தை எடுத்து,*

**கோத்ரஸ்ய ... சர்மண:... ரூபஸ்ய ..பிது:...ச்ராத்தே...கோத்ர சர்மன் வஸு ரூப பித: இதம் தே அர்க்யம்** என்று சொல்ல, **அஸ்து**

**அர்க்யம்** என்று பதில் சொன்னவுடன்; கர்த்தாவின் இடதுகை, அவனுடைய வலதுகையைத் தொட்டுக்கொண்டிருக்க, வலது கையால் அர்க்யத்தைக் கொடுத்து, வலது கையால் ப்ராஹ்மணரின் கையிலுள்ள தீர்த்தத்தை மூடிக்கொண்டு, **யா திவ்யா ஆப**:...என்று அனுமந்த்ரித்து சுத்தோதகம் கொடுத்து பவித்ரத்தை எடுத்து, எடுத்த பாத்ரத்தில் தெற்கு நுனியாக வைத்து, அத்தி இலையால் மூடி.

### பிதாமஹருக்கு அர்க்யதானம்

பிதாமஹர்கையில் சுத்தோதகம் கொடுத்து, பிதாமஹபாத்ரத்திலிருந்து பவித்ரத்தை எடுத்து பிதாமஹர் கையில் தெற்கு நுனியாக வைத்து, அத்தி இலையால் அர்க்ய ஜலத்தை எடுத்து. **கோத்ரஸ்ய .. சர்மண: ரூபஸ்ய பிது: ச்ராத்தே கோத்ர...சர்மன் ருத்ரரூப பிதாமஹ இதம் தே அர்க்யம்** என, **அஸ்து அர்க்யம்** என ப்ரதி வசனம் கிடைத்தவுடன், அர்க்யத்தைக் கையில் சேர்த்து, **யா திவ்யா**: என்று அனுமந்த்ரணம் செய்து சுத்தோதகம் கொடுத்து, பவித்ரத்தை எடுத்து, எடுத்த பாத்ரத்தில் வைத்து அத்தி இலையால் மூடி—

### ப்ரபிதாமஹருக்கு அர்க்யதானம்

ப்ரபிதாமஹர் கையில் சுத்தோதகம் கொடுத்து ப்ரபிதாமஹ பாத்ரத்திலிருந்து, பவித்ரத்தை எடுத்து அவர்கையில் தெற்கு நுனியாக வைத்து அத்தி இலையினால் அர்க்ய ஜலத்தை எடுத்து, **கோத்ரஸ்ய .. சர்மண**: .. **ரூபஸ்ய பிது: ச்ராத்தே .. கோத்ர...சர்மன் ஆதித்யரூப ப்ரபிதாமஹ இதம் தே அர்க்யம்** என்று ப்ரார்த்தித்த பின், **அஸ்த்வர்க்யம்** என பதில் கிடைத்ததும், அர்க்ய ஜலத்தைக் கையில் சேர்த்து வலது கையினால் மூடி, **யா: திவ்யா**: என்று அனுமந்த்ரணம் செய்து, மறுபடியும் சுத்தோதகம் கொடுத்து பவித்ரத்தை எடுத்து ப்ரபிதாமஹரின் பாத்ரத்தில் வைக்கவும்.

**குறிப்பு** :—பிதாவிற்காக ஒருவர், பிதாமஹர்க்காக ஒருவர், ப்ரபிதாமஹர்க்காக ஒருவர் என்று மூன்று ஸ்வாமிகளை எழுந்தருளப் பண்ணியிருப்பதாகக் கருதி இங்கு மந்த்ரம் உள்ளது. பித்ருபிதாமஹ ப்ரபிதாமஹர்களுக்காக ஒருவரையே வரிப்பது என்ற வழக்கமிருந்து வருவதால், அவர் ஒருவரிடத்திலேயே, மூவர்க்கும் கொடுக்க வேண்டிய அர்க்யத்தைக் கொடுத்து விடவேண்டும். ஒருவரிடமே தருவதால் **யா திவ்யா** : என்று சொல்லிச் செய்யும் அனுமந்த்ரணத்தை, கடைசியில் ஒரு தடவை செய்தால் போதும் என்பது சிலர் அபிப்ராயம்.

தாயின் ச்ராத்தத்தில் அர்க்யம் தரும்போது **மாத:**, **பிதாமஹி**, **ப்ரபிதாமஹி** என ஊஹம் (மாறுதல்) செய்துகொள்ளவேண்டும்.
**अर्घ्यप्रदानमन्त्रेषु मात्रादिपदमावपेत्।** [कारिका-२.१०.९. பக்கம் 302]

பித்ருக்களுக்கு அர்க்யத்தைத் தரும்போது கர்த்தா **உபவீதி**யாக இருக்கவேண்டுமென்று வசனம் உள்ளது அர்க்யம் தரும் போது ப்ராஹ்மணர் தமது கையில் தரப்பட்ட அர்க்ய ஜலத்தை விரல்களின் இடை வழியாக கைக்குக் கீழே வைத்திருக்கும் தொன்னையில் விட்டு விடவேண்டும். புத்ர காமனைக் கர்த்தா இருந்தால், அந்த ஜலத்தை எடுத்து முகத்தைத் துடைத்துக் கொள்ள வேண்டும் என்பர் சிலர். இந்த தீர்த்தத்தை உபயோகிக்காமல் அப்படியே வைத்து விடவேண்டுமென்பது பலர் கருத்து.

## ९. (३) अर्घ्यपात्रनिधानम्

प्रपितामहपात्रस्थं जलं पितामहपात्रे निनीय, तज्जलं पितृपात्रे निनीय, तज्जलं ईषदादाय, तेन अर्घ्यशेषजलेन पुत्रकामः मुखं अनक्ति। न चेत् नानक्ति।

[**पक्षान्तरम्** - पितामह - प्रपितामहार्घ्यशेषाण्यादाय युगपत्पितृपात्रे समवनयति।]

प्रपितामहपात्रेण पितृपात्रं पिधाय, पितामहपात्रं पितृपात्रस्य पार्श्वे न्यङ्निधाय–

**पितृभ्यः स्थानमसि** इति पात्राणामुपरि तिलान् विकिरेत्।

**ப்ரயோக விளக்கம்:—**

### 9. (3) அர்க்யபாத்ரங்களை வைத்தல்

ப்ரபிதாமஹபாத்ர ஜலத்தை பிதாமஹபாத்ரத்தில் சேர்த்து, பிதாமஹபாத்ர ஜலத்தை, பித்ரு பாத்ரத்தில் சேர்த்து, கர்த்தா, தனக்குப் புத்ரன் பிறக்க வேண்டும் என விரும்பினால் பித்ரு பாத்ரத்தில் சேர்க்கப்பட்ட இந்த அர்க்யசேஷ ஜலத்தில் சிறிது எடுத்து தன் முகத்தில் தடவிக் கொள்ளவேண்டும். விருப்பமில்லாவிடில் தடவிக் கொள்ள வேண்டாம். ப்ரபிதாமஹ. பிதாமஹ பாத்ரஜலத்தை ஒரே ஸமயத்திலே பித்ருபாத்ரத்தில் விடவேண்டும் என்றஸம்ப்ரதாயத்தை **முத்து தீக்ஷிதர்** கொடுத்திருக்கிறார்.

ப்ரபிதாமஹபாத்ரதால் பித்ரு பாத்ரத்தை மூடி பிதாமஹபாத்ரத்தை அவ்விரண்டு பாத்ரங்களின் பக்கத்தில், கவிழ்த்திருக்கும்படி சாய்த்து வைத்து, எள்ளையெடுத்து **பித்ருப்யப: ஸ்தானமஸி** என்று சொல்லி, பாத்ரங்களின்மேல் சேர்க்கவேண்டும். ச்ராத்தம் முடியும் வரை இந்த பாத்ரங்களைத் திறக்கக்கூடாது.

**குறிப்பு**:-பித்ருபாத்ரத்தை நிமிர்த்தி வைத்து ப்ரபிதாமஹ பாத்ரத்தால் மூடிவைக்க வேண்டு என்பது ஒருஸம்ப்ரதாயம். எல்லாவற்றையுமே கவிழ்த்து வைக்கலாம் என்பதும் சிலர் அபிப்பிராயம். இதற்கு ப்ரமாணம்:-

**न्यग्बिलं पितृपात्रं स्यादासमाप्तेस्तु कर्मणः ।**
**उत्तानं वा तृतीयेन पिहितं तन्न चालयेत् ॥ कारिका—२.७. १९-२०.**

'கர்ம முடியும் வரை பித்ருபாத்ரம் கவிழ்க்கப்பட்டு இருக்க வேண்டும். அல்லது மூன்றுவது பாத்ரமான ப்ரபிதாமஹ பாத்ரத்தினல் மூடப்பட்டு நிமிர்த்தப்பட்டும் இருக்கலாம். இதை இடம்விட்டு கூடாது.'

கீழே கொடுக்கப்பட்டுள்ள ச்லோகங்களையும் கவனிக்க.

**आसिच्य प्रथमे पात्रे अपः शिष्टाः द्विपात्रयोः ।**
**अञ्ज्यान्मुखं पुत्रकामः ताभिरद्भिः यथाविधि ॥**
**अपिधानमिहाचार्याः प्रथमस्य वदन्ति तु ।**
**पिधानं तत्प्रयोगज्ञैः तृतीयेनेति कथ्यते ॥**

[शौनकीयम् – १.२५.३०-३१]

## ९. (४) विष्णवेऽर्घ्यदानम्

विष्णुब्राह्मणहस्ते शुद्धोदकं दत्त्वा, विष्णुपात्रात् पवित्रमादाय, हस्ते उदगग्रं निधाय, औदुम्बरपर्णेन अर्घ्यं गृहीत्वा—

. . . गोत्रस्य . . . शर्मणः . . . रूपस्य पितुः श्राद्धे, श्राद्धसंरक्षक विष्णो, इदं ते अर्घ्यम् इत्युक्त्वा, अस्त्वर्घ्यम् इति उक्ते, अर्घ्यं दत्त्वा—

या दिव्या आपः पृथिवी संबभूवुः या अन्तरिक्ष्याः उत पार्थिवीर्याः।
हिरण्यवर्णाः यज्ञियास्ता न आपः शं स्योना भवन्तु । ॥

इत्यनुमन्त्र्य, शुद्धोदकं दत्वा, पवित्रमादाय पात्रे निधाय, औदुम्बरपर्णेन आच्छादय दर्भैः प्रच्छादयेत् ॥

**ப்ரயோக விளக்கம்:-**

**9 (4) விஷ்ணுவிற்கு அர்க்யம் தருதல்**

விஷ்ணுவின் கையில் சுத்தோதகம் கொடுத்து, விஷ்ணுபாத்ரத்திலிருந்து பவித்ரத்தை எடுத்து, வடக்கு நுனியாகக் கையில் வைத்து, அத்தி இலையால் அர்க்ய தீர்த்தத்தை எடுத்து **கோத்ரஸ்ய சர்மண: ச்ராத்தே விஷ்ணோ இதம் தே அர்க்யம்** என்று ப்ரார்த்தித்து, **அஸ்து அர்க்யம்** என்று அனுமதித்தவுடன் அர்க்யத்தைக் கொடுத்து **யா திவ்யா**: என **அனுமந்த்ரணம்** செய்து சுத்தோதகம் கொடுத்து பவித்ரதை எடுத்து விஷ்ணுபாத்ரத்தில் வைத்து அத்தி இலையாலும் தர்ப்பத்தாலும் மூடி விடவேண்டும்.

## १०. (१) पञ्चोपचारकरणम्

## विश्वेषां देवानाम्

**उपवीती—**

देवब्राह्मणस्य दक्षिणांगे पदादिमूर्धान्तं अक्षतान् विकीर्य—

१. पुरूरवार्द्रवसंज्ञकाः विश्वेदेवाः देहालङ्कारणार्थे यथाभागशः अमी वो गन्धाः । उपचारार्थे पुनरिमे गन्धाः ।

२. माल्यार्थं इमानि पुष्पाणि तुलसीदलानि च ।

३. आघ्राणार्थं अयं वो धूपः ।

४. अवलोकनार्थं अयं वो दीपः ।

५. आच्छादनार्थं उत्तरीयाद्यर्थं चेदं वस्त्रद्वयम् । धारणार्थं इदं यज्ञोपवीतम् । पवित्रार्थं इमौ दर्भौ । शेषोपचारार्थे इमे अक्षाताः । सकलाराधनैः स्वर्चितम् ॥

## पितृणाम्

**प्राचीनावीती —**

पितृब्राह्मणस्य वामांगभागे मूर्धादि पादान्तं तिलान् विकीर्य—

१. वसुरुद्रादित्यस्वरूपास्मत्पितृपितामहप्रपितामहाः, देहलङ्कारणार्थे यथाभागशः अमी वो गन्धाः । उपचारार्थे पुनः इमे गन्धाः ।

२. माल्यार्थं इमानि पुष्पाणि तुलसीदलानि च ।

३. आघ्राणार्थं अयं वो धूपः ।

४. अवलोकनार्थं अयं वो दीपः ।

५. आच्छादनार्थं उत्तरीयाद्यर्थं चेदं वस्त्रत्रयम् । धारणार्थं इदं यज्ञोपवीतम् । पवित्रार्थं इमे दर्भाः । शेषोपचारार्थे इमे अक्षताः । सकलाराधनैः स्वर्चितम् ॥

**विष्णोः**

उपवीती—

१. श्राद्धसंरक्षक श्रीमहाविष्णो देहालङ्कारणार्थे अमी ते गन्धाः । उपचारार्थे पुनरिमे गन्धाः ।

२. माल्यार्थं इमानि पुष्पाणि तुलसीदलानि च ।

३. आघ्राणार्थमयं ते धूपः ।

४. अवलोकनार्थमयं ते दीपः ।

५. आच्छादनार्थं उत्तरीयाद्यर्थं चेदं वस्त्रत्रयम् । धारणार्थं इदं यज्ञोपवीतम् । पवित्रार्थं इमौ दर्भौ । शेषोपचारार्थे इमे अक्षताः । सकलाराधनैः स्वर्चितम् ॥

**ப்ரயோக விளக்கம் :**

10. (1) **ஐந்து உபசாரங்களைத் தருதல்**

கர்த்தா **உபவீதியாக** இருந்து **புரூரவார்த்ரவ... விச்வேதேவா:** என்று தொடங்கி, அந்தந்த வாக்யங்களைச் சொல்லி, சந்தனம் புஷ்பம், தூபம், தீபம், வஸ்த்ரம், யஜ்ஞோபவீதம், தர்ப்பம் இவைகளைத் தரவேண்டும். பூஜை முடிந்ததை **ஸகலாராதனை: ஸ்வர்ச்சிதம்** என்று சொல்லித் தெரிவிக்க வேண்டும். இதேபோல் பித்ரு ப்ராஹ்மணர் விஷ்ணு இருவருக்கும் செய்யப்பட வேண்டும்.

**குறிப்பு : ஆச்வலாயனர்** ஐந்து உபசாரப் பொருள்களை மாத்திரமே தரும்படி தமது க்ருஹ்யஸூத்ரத்தில் 4.8 1 கூறியிருக்கிறார். இதற்கான மந்த்ரம் தராததால் மந்த்ரமின்றிச் செய்வதில் குறை எதுவும் ஏற்படாது என்பது சிஷ்டர்களின் கருத்து.பலர் அனுஷ்டானமும் அப்படியே உள்ளது. தூபதீபங்களைத் தருவதற்குச் சிலர் தீர்த்தத்தையே உபயோகிப்பர். மந்த்ரம் சொல்லிச் செய்ய விரும்புபவர்களுக்கு மந்த்ரங்களுடன் செய்யும்முறை அடுத்து 10. (2) என்ற பகுதியில் தரப்பட்டுள்ளது.

வஸ்த்ரம் மூன்று தரப்பட வேண்டும். முடியாவிட்டால் அதற்காகச் சிறிது தக்ஷிணை தரவேண்டும். யஜ்ஞோபவீததானம் வஸ்த்ரதானத்தை விட உயர்ந்தது என மார்க்கண்டேய ஸ்ம்ருதி கூறுகின்றது.

**वासांसि वाससी वासो यो ददाति पितुर्दिने तन्तुसंख्यातवर्षेण देवलोके महीयते॥**
[वाधूलस्मृतिः, श्लोकः, 207]

**यज्ञोपवीतदानेन वस्त्रदानफलं लभेत्। वस्त्रदानफलं तुच्छं औपवीतमनन्तकम्॥**
[मार्कण्डेयस्मृतिः, दानफलप्रकरणम् । பக்கம்.101]

இவை ஐந்து தவிர கர்த்தா வேறு பொருட்களையும் தர விரும்பினால் அவற்றை தக்ஷிணை தரும்போது தரலாம் என்பர் **வ்யாக்யாதா.** ஒவ்வொரு உபசாரப் பொருளைத் தரும்போதும் முதலிலும், கொடுத்த பிறகும், ப்ராஹ்மணர் கையில் தீர்த்தம் தர வேண்டும். எல்லோருக்கும் உபசாரப் பொருளைத் தந்த பிறகு கர்த்தா கையை அலம்பிக் கொண்டு ஒருமுறை ஆசமனம் செய்யவேண்டும்.

## १० (२) पञ्चोपचारकरणे अन्यः प्रकारः
## विश्वेषां देवानामुपचारः

उपवीती—

अर्चत प्रार्चत प्रियमेधासो अर्चत।

अर्चन्तु पुत्रकाः उत पुरं न धृष्ण्वर्चत॥ [ऋ. ८.६९.८]

... गोत्रस्य ... शर्मणः पितुः श्राद्धे पुरूरवार्द्रवसंज्ञक-विश्वे देवाः, इदं वः अर्चनम् इति अक्षतान् विश्वेदेवब्राह्मण-दक्षिणाङ्गे पादादि मूर्धान्तं विकीर्य अर्चयेत् ।

गन्धद्वारां दुराधर्षां नित्यपुष्टां करीषिणीम् ।
ईश्वरीं सर्वभूतानां तामिहोप ह्वये श्रियम् ॥

विश्वे देवाः, देहालङ्करणार्थे यथाभागशः अमी वो गन्धाः इति चन्दनम्—

**आयने ते परायणे दूर्वा रोहन्तु पुष्पिणीः ।**
**ह्रदाश्च पुण्डरीकाणि समुद्रस्य गृहा इमे ॥** [ऋ. १०.१४२.८]

माल्यार्थे इमानि पुष्पाणि तुलसीदलानि च इति तानि—

**ईळिष्वा हि प्रतीव्यम् १ यजस्व जातवेदसम् ।**
**चरिष्णुधूमं अगृभीतशोचिषम् ॥** [ऋ.८.२३.१]

आघ्राणार्थमयं वो धूपः (उदकेन कल्पितः) इति धूपम्—

**पवमानः अजीजनत् दिवः चित्रं न तन्यतुम् ।**
**ज्योतिर्वैश्वानरम् बृहत् ॥** [ऋ. ९.६१.१६]

अवलोकनार्थमयं वो दीपः(उदकेन कल्पितः) इति दीपम्—

**युवा सुवासाः परिवीत आगात् स उ श्रेयान् भवति जायमानः ।**
**तं धीरासः कवय उन्नयन्ति स्वाध्यो ३ मनसा देवयन्तः ॥**
[ऋ. ३.८.४]

अथवा—

**युवं वस्त्राणि पीवसा वसाथे युवोरच्छिद्रा मन्तवो ह सर्गाः ।**

**अवातिरतमनृतानि विश्व ऋतेन मित्रावरुणा सचेथे ॥**

[ऋ. १.१५२.१]

इति मन्त्रेण आच्छादनाद्यर्थं इदं वस्त्रतंयं इति वस्त्रं च दद्यात् । पवित्रार्थं इमौ दर्भौ इति दर्भद्वयं दद्यात् । शेषोपचारार्थे इमे अक्षताः । सकलाराधनैः स्वर्चितम् इति अक्षतान् समर्पयेत् ॥

## पितृणामुपचारः

प्राचीनावीती—

अर्चत प्रार्चत प्रियमेधासो अर्चत ।
अर्चन्तु पुत्रकाः उत पुरं न धृष्ण्वर्चत ॥

... गोत्रस्य ... शर्मणः पितुः श्राद्धे ... गोत्राः ... शर्माणः वसुरुद्रादित्यस्वरूपाः अस्मत्पितृपितामह-प्रपितामहाः, इदं वः अर्चनम् इति तिलान् वामभागे पादादि मूर्धान्तं विकीर्य-

गन्धद्वारां दुराधर्षां नित्यपुष्टां करीषिणीम् ।
ईश्वरीं सर्वभूतानां तामिहोप ह्वये श्रियम् ॥

पितृ-पितामह-प्रपितामहाः, देहालङ्करणार्थे यथाभागशः अमी वो गन्धाः इति गन्धम्—

आयने ते परायणे दूर्वा रोहन्तु पुष्पिणीः ।
ह्रदाश्च पुण्डरीकाणि समुद्रस्य गृहा इमे ॥

माल्यार्थे इमानि पुष्पाणि तुलसीदलानि च इति तानि-

ईळिष्वा हि प्रतीव्यं यजस्व जातवेदसम् ।
चरिष्णुधूमं अगृभीतशोचिषम् ॥

आघ्राणार्थं अयं वो धूपः (उदकेन कल्पितः) इति धूपम्–

पवमानः अजीजनत् दिवश्चित्रं न तन्यतुम् ।
ज्योतिर्वैश्वानरं बृहत् ॥

अवलोकनार्थमयं वो दीपः (उदकेन कल्पितः) इति दीपम्—
युवा सुवासाः परिवीत आगात् स उ श्रेयान् भवति जायमानः ।
तं धीरासः कवय उन्नयन्ति स्वाध्यो ३ मनसा देवयन्तः ॥

अथवा—

युवं वस्त्राणि पीवसा वसाथे युवोरच्छिद्रा मन्तवो ह सर्गाः।
अवातिरतमनृतानि विश्व ऋतेन मित्रावरुणा सचेथे ॥

इति मन्त्रेण आच्छादनाद्यर्थमिदं वस्त्रत्रयम् इति वस्त्रं च दद्यात् । पवित्रार्थमिमे दर्भाः इति दर्भत्रयं दद्यात् । शेषोपचारार्थे इमे तिलाः । सकलाराधनैः स्वर्चितम् इति तिलान् विकिरेत् ॥

## विष्णोः उपचारः

**उपवीती—**

अर्चत प्रार्चत प्रियमेधासो अर्चत ।
अर्चन्तु पुत्रकाः उत पुरं न धृष्णवर्चत ॥

... गोत्रस्य ... शर्मणः पितुः श्राद्धे श्राद्धसंरक्षकश्री - महाविष्णो इदं ते अर्चनम् इति अक्षतान् विकिरेत् ।

गन्धद्वारां दुराधर्षां नित्यपुष्टां करीषिणीम् ।
ईश्वरीं सर्वभूतानां तामिहोप ह्वये श्रियम् ॥

श्राद्धसंरक्षकश्रीमहाविष्णो, देहालङ्करणार्थे अमी ते गन्धाः इति चन्दनम्—

आयने ते परायणे दूर्वा रोहन्तु पुष्पिणीः ।
ह्रदाश्च पुण्डरीकाणि समुद्रस्य गृहा इमे ॥

माल्यार्थे इमानि पुष्पाणि तुलसीदलानि च इति तानि—

ईळिष्वा हि प्रतीव्यं यजस्व जातवेदसम् ।
चरिष्णुधूमम् अगृभीतशोचिषम् ॥

आघ्राणार्थमयं ते धूपः (उदकेन कल्पितः) इति धूपम्—

पवमानः अजीजनत् दिवश्चित्रं न तन्यतुम् ।
ज्योतिर्वैश्वानरं बृहत् ॥

अवलोकनार्थमयं ते दीपः (उदकेन कल्पितः) इति दीपम् -

युवा सुवासाः परिवीत आगात् स उ श्रेयान् भवति जायमानः ।
तं धीरासः कवय उन्नयन्ति स्वाध्यो ३ मनसा देवयन्तः ॥

अथवा—

युवं वस्त्राणि पीवसा वसाथे युवोरच्छिद्रा मन्तवो ह सर्गाः ।
अवातिरतमनृतानि विश्व ऋतेन मित्रावरुणा सचेथे ॥

इति मन्त्रेण आच्छादनाद्यर्थं इदं वस्त्रत्रयं इति वस्त्रं च दद्यात् ॥
पवित्रार्थमिमौ दर्भौ इति दर्भद्वयं दत्वा, शेषोपचारार्थे इमे अक्षताः । सकलाराधनैः स्वर्चितमिति अक्षतान् विकिरेत् ॥
ततः हस्तौ प्रक्षाल्य सकृत् आचामेत् ॥

**ப்ரயோக விளக்கம் :**

### 10(2). ஐந்து உபசாரங்களைச் செய்வதில் மற்ளொரு முறை விச்வேதேவர்களுக்கு உபசாரம்

கர்த்தா **உபவீதியாக** இருந்துகொண்டு விச்வேதேவப்ராஹ்மணரின் திருமேனியின் வலது பாகத்தில் பாதம் தொடங்கி சிரஸ்

வரை **அர்ச்சத** என்று மந்த்ரம் சொல்லி அக்ஷதைகளைத் தூவி அர்ச்சித்த பின், **கந்தத்வாராம்** என்பதைச் சொல்லி **கோத்ரஸ்ய... அமீ வோ கந்தா:**—என சந்தனத்தையும், **ஆயநே** என புஷ்பத்தையும், **ஈளிஷ்வா ஹி** என தூபத்தையும், **பவமான:** என தீபத்தையும், **யுவாஸுவாஸா:** அல்லது **யுவம் வஸ்த்ராணி** என வஸ்த்ரங்களையும் தரவேண்டும். **ஸகலாராதனை: ஸ்வர்ச்சிதம்** என்று கூறி **உபசார தானம்** முடிந்ததைத் தெரிவிக்க வேண்டும்.

**குறிப்பு : அர்ச்சத** என்று அக்ஷதை சேர்ப்பதை அர்ச்சனையாகக் கருதாமல் பூஜைகளை ஏற்றுக் கொள்வதற்கான ப்ரார்த்தனை என்பர் சிலர். வைஷ்ணவர்கள் போஜன காலத்தில் வட்டமான பவித்ரம் தரிப்பதால் தர்ப்பம் தரப்படுகிறது.

சிலர் உபசாரப் பொருட்களைத் தனித்தனியே தராமல் எல்லாவற்றையும் ஒரு தட்டில் வைத்து மந்த்ரங்கள் எல்லாவற்றையும் சொல்லி முடிவில் கொடுத்து விடுவர்.

**ப்ரயோக விளக்கம்**

**பித்ருக்களுக்கு உபசாரம்**

**ப்ராசீனாவீதியாக அர்ச்சத** என அக்ஷதை சேர்த்து, **கந்தத்வாராம்... இமே கந்தா:** என சந்தனத்தையும், **ஆயநே தே** என புஷ்பம் துளஸீதளத்தையும், **ஈளிஷ்வா ஹி** ..என தூபத்தையும், **பவமான:** என தீபத்தையும், **யுவாஸுவாஸா:** அல்லது **யுவம்வஸ்த்ராணி** என வஸ்த்ரத்தையும் கொடுத்து, **பவித்ரார்த்தம்** என மூன்று தர்ப்பங்களைக் கொடுத்து . **ஸ்வர்ச்சிதம்** என உபசாரத்தை முடித்து எள் சேர்க்கவும்.

**ப்ரயோக விளக்கம்**

**விஷ்ணுவிற்கு உபசாரம்**

கர்த்தா **உபவீதியாக** இருந்து கொண்டு **அர்ச்சத** என்பதால் அர்ச்சித்து, **கந்தத்வாரம், ஆயநே தே, ஈளிஷ்வாஹி, பவமான:, யுவா, ஸுவாஸா:** அல்லது **யுவம்வஸ்த்ராணி** என்ற மந்த்ரங்களைச் சொல்லி, முறையே சந்தனம், புஷ்பம், தூபம், தீபம், வஸ்த்ரம் இவைகளைக் கொடுத்து பவித்ர தர்ப்பம் தந்து அக்ஷதை சேர்த்து உபசார முடிவைத் தெரிவிக்க வேண்டும்.

**குறிப்பு** : ப்ராஹ்மணர்களுக்கு அர்ச்சனை செய்து முடித்தவுடன் கர்த்தா ஆசமனம் செய்ய வேண்டும். கீழே தந்துள்ள ச்லோகம் ச்ராத்தம் தொடங்கி முடிவதற்குள் எவ்வெப்போது ஆசமனம் செய்ய வேண்டும் என்பதைக் கூறுகிறது.

'हेमाद्रौ संग्रहे -'आदौ, विप्राङ्घ्रिशौचान्तेऽभ्यर्चने, विकिरे कृते। पिण्डा-न्भ्युप्य, अर्चयित्वा च, विसर्ज्य ब्राह्मणांस्तथा। आचामेत् श्राद्धकर्ता च स्थानेष्वे-तेषु सप्तसु॥ आद्यन्तयोः द्विराचामेत् शेषेषु तु सकृत् सकृत्॥

तत्रैव-'श्राद्धारम्भेऽवसाने च पादशौचार्चनान्तयोः। विकिरे पिण्डदाने च षट्स्वाचमनमिष्यते'॥ [நிர்ணய ஸிந்து. பக்கம். 300]

## ११. अथ अग्नौ अन्नहोमः

**प्राचीनावीती—**

चरुपात्रं पुरतो निधाय, वसुरुद्रादित्यस्वरूपास्मत्पितृपिता-मह-प्रपितामहाः, अन्नमग्नौ करिष्ये - इति अभ्यर्थ्य, क्रियताम् (कुरुष्व) इति प्रतिवचनं प्राप्य - मेक्षणमुपस्तीर्य, अवदान-धर्मेण - द्विः त्रिः वा यथाशास्त्रं अवदाय—

[मध्यात् पूर्वार्धाच्च हविषः अवदाय इति चतुरवत्ति-नाम्। मध्यात् पूर्वार्धात् पश्चार्धाच्चेति पञ्चावत्तिनाम्—]

हविः - अवत्तं च सकृदभिघार्य—

**सोमाय पितृमते स्वधा नमः**– इति चरुं अग्निमध्ये हुत्वा–सोमाय पितृमते इदम् न मम - इत्युक्त्वा–

पुनर्मेक्षणमुपस्तीर्य पूर्ववदवदाय, हविः अवत्तं च प्रत्यभि-घार्य —

**अग्नये कव्यवाहनाय स्वधा नमः**—इति अग्नौ हुत्वा—

[**आश्व. श्रौ. २.६.११**]

अग्नये कव्यवाहनायेदं न मम इत्युक्त्वा—

मेक्षणमग्नौ प्रहृत्य–

मम पितु: श्राद्धे, अस्मिन् होमकर्मणि मध्येसम्भावितसमस्त-दोषप्रायश्चित्तार्थं सर्वप्रायश्चित्तं होष्यामि-ओम्भूर्भुव: स्व: स्वाहा-इति स्रुवेणाज्यमादाय हुत्वा प्रजापतय इदम् न मम इति आज्यपात्रं उत्तरतो निधाय - अप्रदक्षिणं परिसमुह्य परिषिच्य–

**ப்ரயோக விளக்கம் :**

**11. அக்னியில் அன்ன ஹோமம்.**

ஆசமனம் செய்து, ப்ராசீனவீதியாக, சருபாத்ரத்தைக் கர்த்தா தன் எதிரில் எடுத்துவைத்து, **வஸு...கரிஷ்யே** என்று பித்ரு ப்ராஹ்மணரை ப்ரார்த்திக்க, **க்ரியதாம்** என அனுமதி தந்தவுடன், மேக்ஷணத்தை எடுத்து இடது கையில் வைத்துக் கொண்டு ஸ்ருவத்தினுல் நெய்யை எடுத்து மேக்ஷணத்தின் நுனிப்பகுதியில் முழு இடமும் படும்படி நெய்தடவி **(उपस्तीर्य)**, அவதான முறைப்படி கையினுல் ஹவிஸ்ஸின் நடுப்பகுதியிலிருந்து ஒருமுறையும், கீழ்ப் பாதியினின்று ஒருமுறையும், பெரும் நெல்லிக்காய் அளவு அன்னத்தை எடுத்து மேக்ஷணத்தில் வைத்து தொன்னையில் உள்ள (ஹவிஸ்) சருவின்மேலும், மேக்ஷணத்தில் உள்ள ஆஹுதிக்கான அன்னத்தின்மேலும் ஸ்ருவத்தினுல் நெய்யை விட்டு பின் ஸ்ருவத்தைக் கீழே வைத்து விட்டு மேக்ஷணத்தை வலது கையில் எடுத்துக் கொண்டு, இடதுகையால் சரு இருக்கும் தொன்னையைப் பிடித்துக் கொண்டு, **ஸோமாய பித்ருமதே ஸ்வதா நம:** என்று சொல்லி ஹோமம் செய்தபின், **ஸோமாய பித்ருமத இதம் ந மம** என்று சொல்ல வேண்டும். பிறகு முன்போல் மேக்ஷணத்தில் நெய்யை விட்டு, சருவை இரண்டு முறை மேக்ஷணத்தில் வைத்து, நெய்யினுல் அபிகாரம் செய்து,

**அக்னயே கவ்யவாஹனுய ஸ்வதா நம:** என்று ஹோமம் செய்து, **அக்னயே கவ்யவாஹனுய இதம் ந மம** என்று சொல்லியபின் **ப்ராசீன வீதி**யாகவே, இருந்து கொண்டு மந்த்ரம் ஏதுமில்லாமல் மேக்ஷணத்தை அக்னியில் போட்டு விட்டு ப்ராயச்சித்த ஹோமம் செய்தபின் பரிஸமூஹனம், பரிஷேசனம் இரண்டையும் அப்ரதக்ஷிணமாகச் செய்யவும்.

மேக்ஷண ஹோமத்தை உபவீதியாகவே செய்யவேண்டும் என்பது பலர் கருத்து கீழே தந்துள்ள குறிப்பையும் கவனிக்க.

**குறிப்பு:**—க்ருஹஸ்தர்கள் சிலர் **சதுரவத்திகள்** எனப்படுவர். இவர்கள் நான்கு தடவை அவதானம் (சருவை எடுத்தல்)

செய்பவர்களாகக் கருதப்படுவர். இவர்கள் ஹோமத்திற்கு அன்னம் எடுக்கும்போது அன்னத்தை இரண்டு முறை எடுத்துக் கொள்ள வேண்டும். முதலில் மேக்ஷணத்தில் செய்யப்படும் **உபஸ்தரணம்,** பிறகு செய்யப்படும் அபிகாரணம் இரண்டையும் சேர்த்து அவதானம் நான்காகக் கணக்கிடப்படுகிறது.

சிலர் பஞ்சாவத்திகள் (ஸ்ரீ வத்ஸ கோத்ரிகள்). இவர்கள் ஹவிஸ்ஸின் நடுப்பகுதியிலிருந்தும், கிழக்குப் பாதியிலிருந்தும், மேற்குப் புறமுள்ள பாதியிலிருந்தும், ஒவ்வொரு முறை எடுப்பதன் மூலம் மூன்று தடவை எடுத்துக் கொள்ள வேண்டும். உபஸ்தரணம், அபிகாரணம் இரண்டையும் சேர்த்தால் ஐந்து அவதானங்கள் (எடுத்துக் கொள்ளுதல்) ஆகின்றன. கீழ் தந்துள்ள ஸூத்ரங்களைப் பார்க்க.

**मध्यात् पूर्वार्द्धाच्च हविषः अवद्यति ।**

**मध्यात् पूर्वार्द्धात् पश्चार्धादिति पञ्चावत्तिनाम् ॥**

**[आश्व.गृ.सू.१.८.२१-२२]**

அக்னியில் ஹோமம் செய்ய அனுமதியை பித்ருப்ராஹ்மணரிடம் பெறவேண்டும் என்பதை நாராயணர், **पित्रार्थान् ब्राह्मणान् अनुज्ञापयति** [4-8-2 ஸூத்ர உரை பக்கம் 184] எனத் தெளிவாகக் கூறுகிறார்.

**ஸோமாய, அக்னயே** என்ற இரண்டு மந்த்ரங்களையும் மஹர்ஷி ச்ரௌத ஸூத்ரத்தில் கொடுத்திருக்கிறார். ஆச்வலாயனர், 2-6-12• ஸூத்ரத்தில் **ஸ்வதா** என்று சொல்லாமல் **ஸோமாய பித்ருமதே ஸ்வாஹா** என ஸ்வாஹாபதம் சொல்லி ஹோமம் செய்யலாம் என்றும், அப்படிச் செய்வதால் **யஜ்ஞோபவீதியாக** முதலில் **அக்னிக்கும்** பிறகு **ஸோமனுக்கும்** செய்யவேண்டும் என்றும் சொல்லி, **இந்த** ஸூத்ரத்தின் முடிவில் **உபவீதி** என்று சொல்லி, அடுத்த ஸூத்ரத்தில் மேக்ஷணத்தை அக்னியில் போடவேண்டும் என்று கூறியிருப்பதை எண்ணி, **உபவீதியாக** மேக்ஷணஹோமத்தைச் செய்யவேண்டும் என்று ப்ரயோககாரர்கள் குறிப்பிடுகிறார்கள். வ்யாக்யாதாக்களோ, பரிசிஷ்டமோ, காரிகையோ உபவீதியாகச் செய்யவேண்டும் என்று சொல்லவில்லை. ப்ரதானஹோமத்தை ப்ராசீனவீதியாகச் செய்திருந்தால் மேக்ஷணத்தை அக்னியில் இடுவதையும் ப்ராசீனவீதியாகச் செய்ய வேண்டும். உபவீதியாகச் செய்திருந்தால் உபவீதியாகச் செய்ய வேண்டும் என்று புலப்படுகிறது. **पिण्डपितृयज्ञवेनाग्नौ हुत्वा मेक्षणमनुप्रहृत्य** என்று தான் **விஜ்ஞானேச்வரர்** (யாஜ்ஞவல்க்ய

ஸ்ம்ருதி பக்கம் 73) சொல்லுகிருர். மேக்ஷணம் என்பதற்கு முன், **உபவீதி** எனச் சேர்க்கவில்லை. **सव्येन अपसव्येन वा मेक्षणमग्नौ अनुप्रहरेत्** என **தர்மஸிந்து**, பக்கம் 320, கூறுகிறது. 'உபவீதியாகவோ ப்ராசீன வீதியாகவோ மேக்ஷணத்தை அக்னியில் போடலாம்.' க்ருஹஸ்தர்கள் ஸ்வஸம்ப்ரதாயத்தை அனுஸரிக்கலாம்.

**ஹவிஸ்** என்பது பாத்ரத்தில் உள்ள சரு. **அவத்தம்** என்பது அதிலிருந்து எடுத்து மேக்ஷணத்தில் வைக்கப்பட்டது. முதலில் ஹவிஸ்ஸிற்கும் பிறகு **அவத்தத்திற்கும் அபிகாரணம்**(நெய் விடுதல்) செய்ய வேண்டும். இரண்டாவது ஹோமம் செய்யும் போதும் **ஹவிஸ்ஸிற்கு அபிகாரணம்** செய்ய வேண்டும் என்பது சிஷ்டர்கள் **கருத்து.** பிறகு இதனின்றும் சிறிது அன்னத்தை எடுத்து பித்ரு ப்ராஹ்மணரின் இலையில் சேர்க்கப் போவதால் **அபிகாரணம்** செய்ய வேண்டும் என்று காரணமும் கூறுவர்.

ஹோமம் செய்யும்போது தவறு நேர்ந்திருக்கலாம் எனக் கருதி ப்ராயச்சித்தமாக **ஓம் பூர்புவஸ்ஸுவ:** என்று ஸர்வப்ராயச்சித்த ஹோமமும் செய்கின்றுர்கள்.

இங்கு சொல்லியிருப்பது அக்னிஹோமமுறை. ஆச்வலாயனிகள், சில ஸந்தர்ப்பங்களில் அக்னியில் ஹோமம் செய்வதற்குப் பதிலாக இந்த ஹோமத்தை, பித்ருப்ராஹ்மணரை போஜனஸ்தானத்தில் எழுந்தருளச் செய்து, பாத்ர சுத்தி செய்த பிறகு இம்மந்த்ரங்களையே சொல்லி அவரது வலது உள்ளங்கையில் ஹோமம் செய்ய வேண்டும். ஹோமம் செய்த அன்னத்தை அவர் தமது இலையில் சேர்த்துக் கொள்வர். **பாணிஹோமம்** என்ற இம்முறை, **ச்ராத்த க்ரமத்தின்** முடிவில் இப்புத்தகத்தில்தரப்பட்டுள்ளது; கவனிக்க.

## १२. भोजनस्थानशुद्धिः

**प्राचीनावीती—**

अपहता असुरा रक्षांसि पिशाचाः ये क्षयन्ति पृथिवीमनु ।
अन्यत्रेतो गच्छन्तु यत्रैतेषां गतम् मनः ॥

[गृ. प.पृ.२३१. । बोधायनपितृमेधसूत्रम् २.९. पृ.४२५]

**उदीरतामवर उत्परासः उन्मध्यमाः पितरः सोम्यासः ।**
**असुं य ईयुरवृका ऋतज्ञाः ते नोऽवन्तु पितरो हवेषु ॥**

[ऋ. १०.१५.१]

इति भोजनस्थाने तिलान् विकीर्य–

अपवित्रः पवित्रो वा सर्वावस्थां गतोऽपि वा ।
यः स्मरेत् पुण्डरीकाक्षं स बाह्याभ्यन्तरः शुचिः ॥

[गरुडपुराणे उत्तरखण्डे. ३५-४८]

इति सकृदुक्त्वा, ओम्, भूर्भुवः स्वः इति त्रिः उच्चार्य कूर्चजलेन त्रिः प्रोक्षेत् ॥

**ப்ரயோக விளக்கம்**

12. **போஜனஸ்தானசுத்தி**

கர்த்தா **ப்ராசீநு** வீதியாக, **அபஹதா:...ஹவேஷு** என்றவரை சொல்லி தர்பத்தினல் ஜலத்தை எடுத்து போஜனஸ்தலம் முழுவதை யும் மூன்று முறை ப்ரோக்ஷிக்க வேண்டும்.

**குறிப்பு:** சிலர் **அபேத வீத** (தைத்திரீய ஸம்ஹிதை 4.2.4.1.) என்ற மந்த்ரத்தைச் சொல்லி சுத்தி செய்கிறார்கள். இம்மந்த்ரத்தால் பூமி சுத்தி செய்வதை போதாயனர் முதலியவர்கள் சொல்லாததால் **அபஹதா:** என்று சொல்லி எள் தூவுவதே பூமிசுத்தியாகும் என்று **ஸ்ம்ருதிமுக்தாபலம் ச்ராத்த காண்டம்** பக்கம் 803 கூறுகிறது.

**अपहतेति च तिलान् विकीर्यान्नं प्रदापयेत्** என அக்னிபுராணமும் (117-21) கூறுகிறது.

**அபஹதா:** என்பதால் எள்ளைத் தூவி **உதீரதாம்** என்று ஜபித்து ப்ரோக்ஷிக்கவேண்டும் என்று பரிசிஷ்டம் கூறும். இந்த பூமிசுத்தியை சிலர் ச்ராத்தம் தொடங்கும் போதே, ச்ராத்தம் செய்யும் இடம், போஜனஸ்தலம் இரண்டிற்கும் செய்கின்றனர்.

## १३ (१) ब्राह्मणोपवेशन अन्नपरिवेषणं च

प्राङ्मुखमासनं देवानां, उदङ्मुखमासनं पितॄणां, सर्वतोमुखं आसनं विष्णोः इति उपवेशार्थं आसनानि परिकल्प्य, स्त्रिया शिष्येण वा भोजनस्थलशुद्धिं कारयित्वा, पात्राणि निधाय ब्राह्मणान् तत्तत्स्थानेषु उपवेश्य–

**उपवीती—**

...गोत्रस्य ...शर्मणः ...रूपस्य पितुः श्राद्धे पुरूरवार्द्रवसंज्ञकानां विश्वेषां देवानां भोजनस्थाने इदं आसनम् इति दर्भद्वयं निधाय, इदं भोजनपात्रासनम् इति भोजनपात्रस्याधो दर्भद्वयं निधाय–

**प्राचीनावीती—**

...गोत्रस्य ... शर्मणः ... पितुः श्राद्धे वसुरुद्रादित्य-रूप-अस्मत्पितृपितामह-प्रपितामहानां भोजनस्थाने इदमासनम् इति दर्भत्रयं निधाय, इदं भोजनपात्रासनमिति दर्भत्रयं भोजन-पात्रस्याधो निधाय—

**उपवीती—**

...गोत्रस्य ... शर्मणः पितुः श्राद्धे श्राद्धसंरक्षकविष्णोः भोजनस्थाने इदमासनम् इति दर्भद्वयं निधाय, इदं भोजनपात्रा-सनम् इति दर्भद्वयं पात्रस्य अधोनिधाय, दर्व्यादिद्वारा – आज्येन पात्रशुद्धिं कृत्वा परिवेषणं कुर्यात् ।

**अयं परिवेषणक्रमः—**

अन्नं च पायसं भक्ष्यं घृतम् च व्यञ्जनादिकम् ।
देवादि विष्णुपर्यन्तं; अन्ते सूपं समाचरेत् ॥

**ப்ரயோக விளக்கம்:**

**13 (1) ப்ராஹ்மணர்களை ஆஸனத்தில் எழுந்தருளச் செய்தலும் அன்னபரிவேஷணம் செய்தலும்**

‘விச்வேதேவரின் ஆஸனம் கிழக்கு நோக்கியது. பித்ரு-ப்ராஹ்மணரின் ஆஸனம் வடக்குநோக்கியது.விஷ்ணுவின் ஆஸனம்

எத்திசையும் நோக்கி இருக்கலாம்' என்பதால் அதை அனுசரித்து உட்காரும் இடங்களில் மணைகளைச் சேர்த்து ஸ்வாமிகளை எழுந்தருளச்செய்து, பத்னியைக் கொண்டோ, சிஷ்யர்களைக் கொண்டோ போஜன பாத்ரம் (இலை) சேர்ப்பதற்கான ஸ்தலசுத்தியைச் செய்து, இலைகளைச் சேர்த்து..... **கோத்ரஸ்ய** .... **சர்மண:**.....**ஆஸனம்** என்று பீடஸ்தானத்தில் இரண்டு தர்பங்களைச்சேர்த்து, **இதம் போஜன பாத்ராஸனம்** என இரண்டு தர்பங்களை இலைகளின் கீழ் சேர்க்கவும்.

விச்வேதேவருக்குச் செய்தது போல், பித்ரு ப்ராஹ்மணருக்கு, **ப்ராசீனாவீதியாக** செய்யவும். போஜன ஸ்தானத்திலும், போஜன பாத்ரத்தின் ஸ்தானத்திலும் மூன்று தர்பங்களைச் சேர்க்கவும்.

**உபவீதியாக**, விச்வேதேவருக்குச் செய்தது போல் விஷ்ணுவிற்கும் செய்யவும். பிறகு எல்லா இலைகளிலும் நெய்தாரையைச் சிறிது, பாத்ரசுத்திக்காக விட்டபின் போஜ்யவஸ்துக்களைப் பரிமாறவும்.

**பரிமாறும் க்ரமம்:-**

அன்னம், பாயஸம், பக்ஷ்யம், நெய், வ்யஞ்ஜனம் என்கிற கறியமுதுவகை முதலியவற்றை,இதே க்ரமத்தில் விச்வேதேவருக்கு முதலிலும், பித்ருஸ்தானத்திற்கு இரண்டாவதாகவும், விஷ்ணுவிற்கு கடைசியிலுமாகப் பரிமாற வேண்டும்.

அன்னம், பாயஸம், பக்ஷ்யங்கள், கறியமுதுகள், நெய், தேன் சர்க்கரை என்றும் பரிமாறும் க்ரமம் ஒன்று உண்டு. கீழ்தந்துள்ள ச்லோகம் இதைச் சொல்கின்றது. சர்க்கரை என்றது இங்கு நாட்டுச் சர்க்கரையை.

**अन्नं च पायसं भक्ष्यं व्यञ्जनानि तथैव च। सूपं चैव घृतम् चैव मधु शर्करया सह ॥**

**குறிப்பு:-** ஆஸனத்திற்கான தர்ப்பத்தைக் கையில் தரக்கூடாது. ஸ்வாமிகளுக்கு அருகில் உள்ள (சேர்த்திருக்கும்) இலை முக்ய பாத்ரம். அதன் கீழுள்ள இலையை **உபபாத்ரம்** என்பர். அன்னத்தை முக்ய பாத்ரத்திலும் பக்ஷ்யம் முதலியவைகளை உபபாத்ரத்திலும் பரிமாறுவர்.

## १३. (२) अन्नसूक्तपठनम्

**उपवीती—**

अन्नसंरक्षणार्थं अन्नसूक्तपठनम् करिष्ये ।
आघ्राणदोषपरिहारार्थं इति केचित् ॥

१. मूर्धानं दिवो अरतिं पृथिव्याः वैश्वानरं ऋत आ जातमग्निम् ।
कविं सम्राजं अतिथिं जनानाम् आसन्ना पात्रं जनयन्त देवाः ॥
[ऋ. ६.७.१.]

१. पितुं नु स्तोषं महो धर्माणं तविषीम् ।
यस्य त्रितो व्योजसा वृत्रं विपर्वमर्दयत् ॥

२. स्वादो पितो मधो पितो वयं त्वा ववृमहे। अस्माकमविता भव ॥

३. उप नः पितवा चर शिवः शिवाभिरूतिभिः ।
मयोभुरद्विषेण्यः सखा सुशेवो अद्वयाः ॥

४. तव त्ये पितो रसा रजांस्यनु विष्ठिताः । दिवि वाताइव श्रिताः ॥

५. तव त्ये पितो ददतस्तव स्वादिष्ठ ते पितो ।
प्र स्वाद्मानो रसानाम् तुविग्रीवाः इवेरते ॥

६. त्वे पितो महानां देवानां मनो हितम् ।
अकारि चारु केतुना तवाहिं अवसावधीत् ॥

७. यददो पितो अजगन् विवस्व पर्वतानाम् ।
अत्रा चिन्नो मधो पितो अरं भक्षाय गम्याः ॥

८. यदपां ओषधीनां परिंशमारिशामहे । वातापे पीव इद्भव ॥

९. यत्ते सोम गवाशिरो यवाशिरो भजामहे । वातापे पीव इद्भव ॥

१०. करम्भ ओषधे भव पीवो वृक्क उदारथिः । वातापे पीव इद्भव ॥

११. तं त्वा वयं पितो वचोभिः गावो न हव्या सुषूदिम ।
देवेभ्यस्त्वा सधमादं अस्मभ्यं त्वा सधमादम् ॥

[ऋ.१.१८७.१-११]

१. कया नश्चित्र आ भुवत् ऊती सदावृधः सखा । कया शचिष्ठया वृता ॥

२. कस्त्वा सत्यो मदानां मंहिष्ठो मत्सदन्धसः । दृळ्हा चिदारुजे वसु ॥

३. अभी षु णः सखीनां अविता जरितॄणाम् । शतं भवास्यूतिभिः

हरिः ओम् ॥ [ऋ ४.३१.१,२,३]

**ப்ரயோக விளக்கம்**

### 13. (2) அன்னஸூக்தபடனம்

கர்த்தா **உபவீதியாக அன்னஸம்ரக்ஷணார்த்தம் அன்ன ஸூக்த படனம் கரிஷ்யே** என்று சொல்லி பதினைந்து ரிக்குகளையும் ஜபம் செய்யவேண்டும். இது முடிந்தவுடன் ரிக்வேதம் அத்யயனம் செய்திருக்கும் நிமந்த்ரித ஸ்வாமி **ஸாவதோரபக்ஷ**[ரி.8.48] என்ற ஸூக்தத்தைச்சொல்லலாம். **ஆப்ரஹ்மன்** என்பதை யஜுர்வேதிகள் சொல்லலாம்.

**குறிப்பு:-** அன்னத்தில் தோஷம் ஏதாவது இருந்தால் அதை நீக்க இந்த ஸூக்தம் படிக்கப்படுகிறது.

இதைச்சிலர் **ப்ராசீனாவீதி**யாகச் செய்கிறார்கள். ச்ராத்தத்தின் நடுவில் **ஜபம்** முதலியவற்றை **உபவீதி**யாகச் செய்ய வேண்டும் என வசனமுள்ளது.

'जमदग्निः—

सूक्तस्तोत्रजपं त्यक्त्वा पिण्डाघ्राणं च दक्षिणाम् ।
आह्वानं स्वागतं चार्घ्यं विना च परिवेषणम् ॥
विसर्जनं सौमनस्यं आशिषां प्रार्थनं तथा ।
विप्रप्रदक्षिणां चैव स्वस्तिवाचनकं विना ॥

पितृनुद्दिश्य कर्तव्यम् प्राचीनावीतिना सदा ॥,[निर्णयसिन्धुः பக்கம் 300.]

'ஸூக்த ஸ்தோத்ர ஜபம், பிண்டத்தை முகருதல், தக்ஷிணை தருதல், ஆஹ்வானம், ஸ்வாகதம், அர்க்யம் தருதல், அன்னம் பரிமாறுதல், விப்ர விஸர்ஜனம் செய்தல், முடிவில் அனுக்ரஹம் ஆசீர்வாதம் கேட்டல், ப்ரதக்ஷிணம் செய்தல் இவை தவிர மற்ற பித்ருகார்யங்களை **ப்ராசீனாவீதி**யாகச் செய்ய வேண்டும்' என்பது இதன் பொருள்.

## १४. हुतशेषसमर्पणम्

परिविष्टं पात्रत्रयस्थितमन्नमभिघार्य हुतशेषात् अल्पं चरुमादाय, पितृभोजनपात्रस्थे अन्ने—

स्वधा इयम् , स्वधेयम्,स्वधेयम् इत्युक्त्वा सकृदन्नं निदध्यात् । इदं समर्पणं पाणिहोमपक्षेऽपि कर्तव्यम् ।

**ப்ரயோக விளக்கம்**

### 14. ஹோமசேஷ அன்னத்திலிருந்து சிறிது எடுத்து பித்ருபாத்ர அன்னத்தில் ஸமர்ப்பித்தல்

மூன்று இலைகளிலும் பரிமாறப்பட்ட அன்னத்தை நெய்யினால் அபிகாரணம் செய்தபின் ஹோமம் செய்த சருவிலிருந்து சிறிது அன்னத்தைக் கையில் எடுத்து பித்ருஸ்தான ப்ராஹ்மணரின் இலையில் உள்ள அன்னத்தில் **ஸ்வதேயம்** என மூன்று முறை சொல்லி, ஒரே தடவை கையில் எடுத்துள்ள அன்னத்தை வைக்கவேண்டும். பாணி ஹோமம் செய்திருந்தாலும் இது செய்யப்பட வேண்டும்.

குறிப்பு:—

இலையிலுள்ள அன்னத்தில் ஹோமம் செய்து மிஞ்சியுள்ள அன்னத்திலிருந்து சிறிது வைக்கவேண்டும் என்று அர்த்தமுள்ள அன்னமன்னே என்ற க்ருஹ்யஸூத்ரம் 4.8.8.இதற்கான மந்த்ரம் தரவில்லை. எவ்வளவு தடவை வைக்க வேண்டும் எனவும் சொல்லாததால் மந்த்ரமின்றி ஒரு தடவை வைத்தாலும் சாஸ்த்ரார்த்தம் செய்யப்பட்டதாகும்.

**பரிசிஷ்டம் காரிகை** இரண்டும் கூட மந்த்ரம் தரவில்லை. மனுஸ்ம்ருதியில் **ஸ்வதா ஏஷாம் அஸ்து** [அத். 3. ச்லோகம் 223] என்று கொடுத்திருப்பதை அனுசரித்து **ஸ்வதா இயம்** என்ற மந்த்ரம் வந்திருக்கலாம். மந்த்ரமில்லாமல் ஒரு தடவை வைப்பது, ஒரு தடவை மந்த்ரம் சொல்லி ஒரு தடவை வைப்பது, மூன்று தடவை மந்த்ரம் சொல்லி ஒரு தடவை வைப்பது, மூன்று தடவை மந்த்ரம் சொல்லி மூன்று தடவை வைப்பது, என அனுஷ்டான பேதங்கள் உள்ளன. தம் தமது ஸம்ப்ரதாயத்தை அனுஸரிப்பது நலம். சிலர் இதை பித்ருஸ்தான ப்ராஹ்மணருக்கு தத்தம் செய்வதற்கு முன் செய்கிறார்கள்.

## १५. परिषेचनं दत्तम् च (कर्ता)

## (१) विश्वेषां देवानाम्

उपवीती—

भगवदाराधनार्घ्यतीर्थं गृहीत्वा—

विश्वेदेवस्थानं गत्वा, परिविष्टमभिघार्य, अर्घ्यतीर्थेन, ओम् भूर्भुवस्स्वः इति प्रोक्ष्य, तत्सवितुर्वरेण्यं भर्गो देवस्य धीमहि । धियो यो नः प्रचोदयात्—

इत्यनुमन्त्र्य (अथवा प्रोक्ष्य) तूष्णीं प्रदक्षिणं परिषिच्य—
विश्वेदेवब्राह्मणहस्ते शुद्धोदकं दत्त्वा, कर्ता—

वामहस्तेन पात्रं स्पृशन् , दक्षिणहस्तेन ब्राह्मणहस्तं गृहीत्वा—
पृथिवी ते पात्रं द्यौरपिधानम् , ब्राह्मणस्त्वा मुखे अमृतं जुहोमि—

ब्राह्मणानां त्वा विद्यावतां प्राणापानयोः जुहोमि ॥
अक्षितमसि मा मे क्षेष्ठाः । अमुत्रामुष्मिन् लोके ॥
[आश्व. गृह्यपरिशिष्टम् पृ-२३४]

**इति अन्नं सर्वं स्पर्शयित्वा**-इदं विष्णुर्विचक्रमे त्रेधा नि दधे पदम् । **समूळ्हमस्य पांसुरे**–स्वाहा, विष्णो हव्यं रक्षस्व इति ब्राह्मण-**पाण्यङ्गुष्ठं अन्ने** निवेश्य, यवोदकं तुलसीदलं चादाय —

गोत्रस्य . . . शर्मणः . . . रूपस्य पितुः श्राद्धे पुरूरवार्द्रव-संज्ञकाः विश्वेदेवाः देवताः । अयं ब्राह्मणस्त्वाहवनीयार्थे । गयेयं भूः । गदाधरो भोक्ता । हव्यं च ब्रह्म । अहं च ब्रह्म । भोक्ता च ब्रह्म । स्वर्णमयं पात्रम् । अक्षयवटच्छायेयम् ।

पुरूरवार्द्रवसंज्ञकेभ्यः विश्वेभ्यो देवेभ्यः इदमिदमिदं हव्यं सव्यञ्जनं सपरिकरं च परिविष्टं अमृतस्वरूपं, आतृप्तेः दत्तं दास्यमानं च स्वाहा । हव्यं नमः । न मम । गयायां अक्षयवट-च्छायायां (ईशानादिचतुर्दशदेवपादेषु दत्तम्) श्रीविष्णुपादे दत्तम् । अहीन्द्रपुरक्षेत्रे तरङ्गमुखनन्दिनीहेमाब्जनायिकासमेत—श्रीदेव-नाथस्वामिसन्निधौ दत्तम् ।

**ये देवासो दिव्येकादश स्थ पृथिव्यामधि एकादश स्थ ।**
**अप्सुक्षितो महिनैकादश स्थ ते देवासो यज्ञमिमं जुषध्वम् ॥**
[ऋ. १.१३९.११]

विश्वेभ्यो देवेभ्यः इदं हव्यम् नमः, न मम । इति यवोदकं तुलसी-दलमिश्रं भोजनपात्रमूलाभागे निनयेत् । विश्वे देवाः, यथासौकर्यं परिषेचनम् ।

**ப்ரயோக விளக்கம் :**

**15. கர்த்தா செய்ய வேண்டிய பரிஷேசனமும் தத்தமும்**

**(1) முதலில் விச்வே தேவருக்கு**

உபவீதியாக கர்த்தா, பகவதாராதன அர்க்ய தீர்த்தத்தை எடுத்துக் கொண்டு விச்வே தேவஸ்தானம் சென்று பரிமாறின அன்னத்திற்கு நெய்யினுல் அபிகாரணம் செய்து, **ஓம் பூர்புவஸ் ஸ்வ:** என்று கூர்ச்சத்தினுல் அர்க்யதீர்த்தத்தை எடுத்து ப்ரோக்ஷித்து, **தத்ஸவிது:** என்று அனுமந்த்ரணம் செய்து மந்த்ரமின்றி உத்தரிணியால் ஜலத்தை எடுத்து ப்ரதக்ஷிணமாக பரிஷேசனம் செய்து விச்வேதேவர் கையில் சுத்தோதகம் கொடுத்து, கர்த்தா-இடது கையால் விச்வேதேவரின் போஜன பாத்ரத்தைத் தாங்கிக் கொண்டு, **ப்ருதிவீ தே பாத்ரம்...லோகே...**என்ற மந்த்ரங்களைச் சொல்லி, வலது கையினுல் விச்வேதேவரின் வலது கையைப் பிடித்து போஜ்ய பதார்த்தங்களைத் தொடச் செய்து,

**இதம்: விஷ்ணு-ஹவ்யம் ரக்ஷஸ்வ** வரை சொல்லி விச்வே தேவரின் வலது கைக்கட்டை விரலை அன்னத்தில் வைக்கச் செய்த பின்,...**கோத்ரஸ்ய...சர்மண:** என்று தொடங்கி **விச்வேப்யோ தேவேப்ய: இதம் நம: ந மம** என்ற வரை சொல்லி அக்ஷதை துளஸீதனம் எடுத்து இலையின் அடி பாகத்தில் தீர்த்தத்துடன் சேர்க்கவும். **விச்வே தேவா: யதாஸௌகர்யம் பரிஷேசனம்** என்றும் சொல்லவும், **ஸத்யம் த்வா ரிதேன பரிஷிஞ்சாமி** என்பர் சிலர்.

**குறிப்பு:—**

பரிமாறப்பட்ட அன்னம் முதலியவற்றின் சுத்தியை உத்தேசித்து, ப்ரோக்ஷணம், பரிஷேசனம் முதலியன செய்யப்படுகின்றன. பிறகு-கர்த்தா—பரிமாறப்பட்டவற்றை விச்வேதேவருக்கு தத்தம் செய்கிறார். **தேவஸவிது: ப்ரஸுவ** என பரிஷேசனம் செய்வது யஜுர்வேத ஸம்ப்ரதாயம். **தூஷ்ணீம் பரிஷிச்ய** என்பது பரிசிஷ்டம், பக்கம் 234. **யே தேவாஸ:** என்பது **உபஸ்தான** மந்த்ரம்.

**ப்ரஹ்மணஸ்த்வா** என்பதற்குப் பதிலாக **ப்ராஹ்மணஸ்த்வா** என்பர் சிலர். இந்த மந்த்ரம், போதாயன க்ருஹ்ய ஸூத்ரத்தில் சிறிது மாறுதலுடன் காணப்படுகிறது. 2. 11. 36.

**ப்ருதிவீ தே** என்பதால் பாத்ரானுமந்த்ரணம் செய்ய வேண்டும் என்பர் யாஜ்ஞவல்க்யர். விஷ்ணுபாதே என்பதற்குப் பதிலாக **ஈசாநாதிஸமஸ்த தேவபாதேஷு தத்தம்** என்பது ஸ்மார்த்த பாடம்

கர்த்தாவின் இஷ்டதேவதையின் பெயரைச் சொல்லி அந்த தேவதையின் ஸந்நிதியில் தானும் செய்வதாக **அஹீந்த்ரபுர க்ஷேத்ரே** என்ற வாக்யம் கூறுகின்றது.

**ரக்ஷஸ்வ** என்பது ஸ்ம்ருதிகளில் உள்ள பாடம். **ரக்ஷ** என்பர் சிலர்.

## १५ (२) पितॄणां परिषेचनं दत्तम् च

**प्राचीनावीति—**

पितृपात्रसमीपे अर्घ्यपात्रं (प्रोक्षणपात्रं) निधाय, अन्नम. भिघार्य,—अर्घ्यतीर्थेन, ओम् भूर्भुवःस्वः इति प्रोक्ष्य–तत्सवितुः ...इति अनुमन्त्र्य, अथवा प्रोक्ष्य, तूष्णीं अप्रदक्षिणं परिषिच्य पितृहस्ते शुद्धोदकं दत्त्वा—

कर्ता-वामहस्तेन भोजनपात्रं धरन् दक्षिणहस्तेन पितृ-ब्राह्मणदक्षिणहस्तं गृहीत्वा—

पृथिवी ते पात्रं द्यौरपिधानम् ब्रह्मणस्त्वा मुखे अमृतं जुहोमि।

ब्राह्मणानां त्वा विद्यावतां प्राणापानयोर्जुहोमि।

अक्षितमसि मा मे क्षेष्ठाः। अमुत्र अमुष्मिन् लोके–

इति परिविष्टं सर्वमन्नं स्पर्शयित्वा—

इदं विष्णुर्वि चक्रमे त्रेधा नि दधे पदम्। समूळ्हमस्य पांसुरे स्वधा विष्णो कव्यं रक्षस्व इति पितृपाण्यङ्गुष्ठं अन्ने निवेश्य—

...गोत्रस्य ...शर्मणः... रूपस्य पितुः श्राद्धे पितृ-पितामहप्रपितामहाः देवताः। ब्राह्मणस्तु पितृपितामहप्रपिता-

महार्थे । गयेयं भूः । गदाधरो भोक्ता । कव्यं च ब्रह्म । अहं च ब्रह्म । भोक्ता च ब्रह्म । राजतं पात्रम् । अक्षय-वटच्छायेयम् ।

...गोत्रेभ्यः ...शर्मभ्यः ...रूपेभ्यः पितृपितामहप्रपिता-महेभ्यः इदमिदमिदं कव्यम्, सव्यञ्जनं सपरिकरं च परि-विष्टम् अमृतस्वरूपम्, आतृप्तेः दत्तं दास्यमानं च स्वधा-कव्यं नमः । न मम । गयायां अक्षयवटच्छायायाम् (ईशानादि–चतुर्दशदेवपादेषु दत्तम् ।) श्रीविष्णुपादे दत्तम् । पञ्चकृष्णार-ण्यक्षेत्रे पुष्पालयाम्बासमेत-श्रीदेहलीशस्वामिसन्निधौ दत्तम् ।

ये चेह पितरः ये च नेह यांश्च विद्म यॉं उ च न प्र विद्म ।
त्वं वेत्थ यति ते जातवेदः स्वधाभिर्यज्ञं सुकृतं जुषस्व ॥

[ऋ. १०.१५ १३]

पितृपितामहप्रपितामहेभ्यः इदं कव्यं स्वधा नमः । न मम-इति तुळसीदलमिश्रं तिलोदकं पितृभोजनपात्रस्याग्रभागे पितृतीर्थेन निनयेत् । पितृपितामहप्रपितामहाः, यथासौकर्यं परिषेचनम् । (सत्यं त्वा ऋतेन परिषिञ्चामि ॥)

**ப்ரயோக விளக்கம்:—**

**15 (2) பித்ருக்களுக்கு பரிஷேசனமும் தத்தமும்**

*பித்ருபாதத்திற்கு அருகில் ப்ரோக்ஷண பாத்ரத்தை வைத்து அன்னத்தை அபிகாரம் செய்து பூர்புவஸ் ஸ்வ: என்று ப்ரோக்ஷித்து, தத்ஸவிது: என்று அனுமந்த்ரித்து; மந்த்ரமின்றி அப்ர தக்ஷிணம் பரிஷேசனம் செய்து, ப்ராஹ்மணர் கையில் சுத்தோ*

தகம் கொடுத்து, கர்த்தா-இடது கையால் பாத்ரத்தைத் தொட்டுத் தாங்கிக் கொண்டு **ப்ருதிவீதே...லோகே** என்ற வரை சொல்லி வலது கையினுல் ப்ராஹ்மணரின் கையைப் பிடித்து பரிமாறப்பட்ட எல்லாவற்றையும் தொடச் செய்து. **இதம் விஷ்ணு: ரக்ஷஸ்வ** என்று சொல்லி ப்ராஹ்மணரின் கட்டைவிரலை அன்னத்தில் வைத்து...**கோத்ரஸ்ய...இதம் ந மம** என்பது வரை சொல்லி துளஸியுடன் எள் ஜலத்தை இலையின் நுனியில் விடவும். **பித்ரு பிதாமஹ, ப்ரபிதாமஹா: யதா ஸௌகர்யம் பரிஷேசனம்** என்றும் சொல்வர். **ரஜதமயம் பாத்ரம்** என்று ஸம்ப்ரதாய பாடம்.

## १५ (३) विष्णोः परिषेचनं दत्तं च

**उपवीती—**

विष्णुपात्रसमीपे प्रोक्षणपात्रं निधाय,अन्नमभिघार्य अर्घ्यतीर्थेन ओम् भूर्भुवस्स्वः इति प्रोक्ष्य, तत्सवितुरिति अनुमन्त्र्य, अथवा प्रोक्ष्य, तूष्णीं प्रदक्षिणं परिषिच्य, हस्ते शुद्धोदकं दत्वा, वाम-हस्तेन विष्णुपात्रं स्पृशन् — दक्षिणहस्तेन ब्राह्मणदक्षिणहस्तं गृहीत्वा—

पृथिवी ते पात्रं द्यौरपिधानम् । ब्रह्मणस्त्वा मुखे अमृतं जुहोमि । ब्राह्मणानां त्वा विद्यावतां प्राणापानयोर्जुहोमि । अक्षितमसि मा मे क्षेष्ठाः । अमुत्रामुष्मिन् लोके–
इति सर्वमन्नं स्पर्शयित्वा—

इदं विष्णुः वि चक्रमे त्रेधा नि दधे पदम् । समूळ्हमस्य पांसुरे । स्वाहा विष्णो हव्यं रक्षस्व इति ब्राह्मणपाण्यङ्गुष्ठं अन्ने निवेश्य–

. . . गोत्रस्य . . . शर्मणः . . . रूपस्य पितुः श्राद्धे श्राद्ध-संरक्षकः विष्णुः देवता । अयं ब्राह्मणस्तु विष्ण्वर्थे । गयेयं भूः ।

गदाधरो भोक्ता। हव्यं च ब्रह्म। अहं च ब्रह्म। भोक्ता च ब्रह्म। स्वर्णमयं पात्रम्। अक्षयवटच्छायेयम्। श्राद्धसंरक्षकश्रीविष्णवे इदमिदमिदं हव्यं सव्यञ्जनं सपरिकरं च परिविष्टं अमृतस्वरूपं, आतृप्तेः दत्तं दास्यमानं च स्वाहा - हव्यम् नमः। न मम। गयायां अक्षयवटच्छायायां श्रीविष्णुपादे दत्तम्। आदिवराहक्षेत्रे पद्मावतीसमेतश्रीवेंकटेश्वरस्वामिसन्निधौ दत्तम्। गयायां दत्तम्। श्राद्धसंरक्षकश्रीविष्णवे इदं नमः न मम इति ब्राह्मणस्य दक्षिणभागे तुलसीदलमिश्रं यवोदकं निनयेत्।

**ப்ரயோக விளக்கம்:—**

**15. (3) விஷ்ணுவிற்கு பரிசேஷணமும் தத்தமும்**

*விச்வேதேவர் ப்ரகரணத்தில் சொல்லியுள்ள விளக்கத்தை இதற்கும் கண்டு கொள்க.*

## १६. समष्टिदानम्

देवपितृमध्ये स्थलशुद्धिं कृत्वा, दर्भान् आस्तीर्य, तदुपरि दक्षिणाग्रं त्रिदर्भंभुग्नं निधाय, तिलाक्षततुलसीदलानि गृहीत्वा–

**प्राचीनावीती—**

यज्ञेश्वरो हव्यसमस्तकव्यभोक्ता अव्ययात्मा हरिरीश्वरोऽत्र।
तत्सन्निधानादपयान्तु सद्यः रक्षांसि अशेषाण्यसुराश्च सर्वे॥

[विष्णुपुराणम् ३. १५. ३६]

एको विष्णुर्महद्भूतं पृथग्भूतान्यनेकशः।
त्रीन् लोकान् व्याप्य भूतात्मा भुङ्क्ते विश्वभुगव्ययः॥

[भारते अनुशासनपर्व - २५४–२४२.]

अनेन, ... गोत्रस्य ... शर्मणः पितुः प्रत्याब्दिकश्राद्धाख्येन भगवदाराधनेन, **अथवा** अनेन मम पितरमुद्दिश्य क्रियमाणेन प्रत्यब्दिकश्राद्धेन—

**उपवीती**—पुरूरवार्द्रवसंज्ञकविश्वेदेवस्वरूपी-

**प्राचीनावीती**—पितृपितामहप्रपितामहस्वरूपी-

**उपवीती**—श्राद्धसंरक्षकश्रीविष्णुस्वरूपी-

**प्राचीनावीती**—सर्वाकारः भगवान् स देवः श्रीहरिः जनार्दनः प्रीयताम्। प्रीयतां जनार्दनः - इति तिलाक्षततुलसीदलानि तीर्थेन सह भुग्ने विसृज्य—

**उपवीती** — नमस्कृत्य -

[ईशान-विष्णु-कमलासन-कार्तिकेय
वह्नित्रयार्क-रजनीश - गणेश्वराणाम्।
क्रौञ्चामरेन्द्रकलशोद्भव-काश्यपानां
पदान् नमामि सततं पितृमुक्तिहेतोः॥

इति उक्त्वा—] [मार्कण्डेयस्मृतिः पृ. २०१]

उत्तराभिमुखः गया, गया, गया।
गयाश्राद्धं गयाश्राद्धं, गयाश्राद्धम्॥
अक्षयवटोऽक्षयवटोऽक्षयवटः—इति च कथयेत्॥

**ப்ரோயக விளக்கம்:—**

**16. ஸமஷ்டிதானம் (எல்லா தத்தகங்களையும் சேர்த்து பகவானுக்கு அர்ப்பணித்தல்**

*விச்வேதேவருக்கும், பித்ருஸ்தான ப்ராம்மணருக்கும், இடையில் உள்ள இடத்தில் ஸ்தலசுத்தி செய்து தர்ப்பங்களைப்போட்டு, தெற்கு நுனியாக புக்னத்தை வைத்து, எள் அக்ஷதை துளஸீ*

தளம் இவைகளை எடுத்துக் கொண்டு **யஜ்ஞேச்வர : ஹவ்ய... ப்ரீயதாம்** வரை சொல்லி புக்னத்தின்மேல் தீர்த்தத்தைச் சேர்த்து (அக்ஷதை முதலியவைகளுடன்) **கயா, கயாச்ராத்தம், அக்ஷய வட :** என்பவற்றை—ஒவ்வொன்றையும்-மூன்று தடவை சொல்ல வேண்டும். மந்த்ரவாக்யங்களில் விச்வேதேவஸ்வரூபீ. விஷ்ணு ஸ்வரூபீ என்று சொல்லும் போது உபவீதியாக இருக்கவேண்டும். அப்பொழுது அவர்களுக்கு வந்தனம் செய்ய வேண்டும். மற்ற ஸமயங்களில் ப்ராசீனவீதம். பித்ரு... ஸ்ரூபீ என்று சொல்லும் போது பித்ருப்ராஹ்மணரைப்பார்த்து அஞ்சலி செய்யவேண்டும்.

**கயாக்ஷேத்ரத்தில் ஈசானர் (ஈச்வரன்)** முதலான பதினன்கு தேவர்களிருப்பதால் அவர்களிடம் பித்ருக்களின் முக்தியை வேண்டுவதாக உள்ள **ஈசான** என்று தொடங்கும் ச்லோகத்தை ஸ்மார்த்தர்கள் சொல்வர். **கச்யபாநாம், பித்ருமுக்திஹேதூன்** என்றும் பாடம் உள்ளது.

**குறிப்பு:** ஸமஷ்டிதானத்திற்கு ப்ரமாணம்:

**दत्तं हविश्च तत्कर्म विष्णवे वै समर्पयेत्-इति बृहन्नारदीये इति निर्णयसिन्धुः** பக்கம் 316.

## १७ (१) अथ भोजनार्थपरिषेचनम्

**उपवीती—**

अर्घ्यतीर्थेन, ओम् भूर्भुवस्स्वः इति प्रोक्षणम्, सत्यं त्वा ऋतेन परिषिञ्चामि इति परिषेचनं च विश्वेदेवानां कारयित्वा-पाद्यतीर्थं दत्त्वा—

विश्वे देवाः ! अमृतं भवतु - अमृतोपस्तरणमसि—

**प्राचीनावीती—**

प्रोक्षणं परिषेचनं च पूर्ववत् कारयित्वा, पाद्यतीर्थं दत्त्वा—

पितृपितामहप्रपितामहाः, अमृतं भवतु, अमृतोपस्तरण-मसि—

**उपवीती—**

विष्णुसमीपं गत्वा, प्रोक्षणं परिषेचनं च पूर्ववत् कारयित्वा पाद्यतीर्थं दत्त्वा–

विष्णो, अमृतं भवतु - अमृतोपस्तरणमसि–

**प्राचीनावीती—**

सर्वत्र अमृतं भवतु - अमृतोपस्तरणमसि स्वाहा - इति आपोशनमपि कारयित्वा–

ओम् प्राणे निविष्टोऽमृतं जुहोमि
शिवो मा विशाप्रदाहाय । प्राणाय स्वाहा ।
ओम्, अपाने निविष्टोऽमृतं जुहोमि ।
शिवो मा विशाप्रदाहाय । अपानाय स्वाहा ।
ओम्, व्याने निविष्टोऽमृतं जुहोमि ।
शिवो मा विशाप्रदाहाय । व्यानाय स्वाहा ।
ओम्, उदाने निविष्टोऽमृतं जुहोमि ।
शिवो मा विशाप्रदाहाय । उदानाय स्वाहा ।
ओम्, समाने निविष्टोऽमृतं जुहोमि ।
शिवो मा विशाप्रदाहाय । समानाय स्वाहा ।
ओम्, ब्रह्मणे स्वाहा ।
ओम्, ब्रह्मणि मे आत्मा अमृतत्वाय ।

[नारायणोपनिषत् - अनु-३४]

इति जपन् प्राणाहुतिं कारयित्वा—

उपवीती—

अप उपस्पृश्य, साधारणतीर्थेन हस्तोदकं दत्त्वा–

स्वामिनः, यान् कांश्चन रक्षोघ्नान् वैष्णवान् मन्त्रान् पितृसूक्तानि पवमानानि इतिहासपुराणानि च भुञ्जानान् भवतः यावच्छक्यम् अभिश्रावयिष्ये - ओम्, श्रावय इति अनुज्ञातः--

स्वामिनः,वसिष्ठ-वामदेव-पराशरादिवत् भवन्तः आगताः। भवदनुगुणं पदार्थजातं सम्पादयितुमशक्तोऽस्मि। मया सम्पादितेषु पदार्थजातेषु - भगवन्निवेदितेषु - यद्यद् अपेक्षितं तत्तदानाय्य यथा रात्रौ क्षुत् न भवेत् तथा मौनेन भुक्त्वा वयमनुग्राह्याः। **स्वामिनः**, यथासुखं जुषध्वम्। कृपां च कुरुध्वमिति प्रार्थयेत॥

अथ कर्ता भुञ्जानान् न समीक्षेत।

अभिश्रवणजपार्थं ऋत्विजं त्वां वृणे इति ब्राह्मणान् वृणीयात्।

ओम्, भूर्भुवः स्वः। ओं तत्सवितुः . . . प्रचोदयात् इति गायत्रीं त्रिवारं जपित्वा—

**मधु वाता ऋतायते मधु क्षरन्ति सिन्धवः। माध्वीर्नः सन्त्वोषधीः॥**

**मधु नक्तमुतोषसो मधुमत् पार्थिवं रजः। मधु द्यौरस्तु नः पिता॥**

**मधुमान्नो वनस्पतिर्मधुमाँ अस्तु सूर्यः। माध्वीर्गावो भवन्तु नः॥**

[ऋ १.९०. ६-८]

**मधु मधु मधु इत्युक्त्वा – पुरुषसूक्तादीनि जपेत्।**

**ப்ரயோக விளக்கம்:—**

## 17 (1) போஜன பரிஷேசனமும் ஸூக்த ஜபமும்

**உபவீதியாக** அர்க்ய தீர்த்தத்தைக் கொடுத்து, **ஓம் பூர்புவஸ் ஸ்வ:** என்று ப்ரோக்ஷணத்தையும், **ஸத்யம் த்வா** என்பதால் பரிஷேசனத்தையும் விச்வேதேவருக்குச் செய்வித்து, பாத்ய தீர்த்தம் கொடுத்து **விச்வேதேவா:, அம்ருதம் பவது, அம்ருதோப ஸ்தரணமஸி** என்று சொல்லியபின், பித்ரு ப்ராஹ்மணரிடம் சென்று,

**ப்ராசீனாவீதியாக,** அர்க்ய தீர்த்தத்தினால் ப்ரோக்ஷணத்தையும் பரிஷேசனத்தையும் செய்வித்து பாத்ய தீர்த்தம் கொடுத்து, **வஸுருத்ராதித்ய ஸ்வரூப அஸ்மத் பித்ரு பிதாமஹ ப்ரபிதாமஹா: அம்ருதம் பவது, அம்ருதோபஸ்தரணமஸி** என்று சொல்லியபின் விஷ்ணுவிடம் சென்று,

**உபவீதியாக** - முன்போல் ப்ரோக்ஷணம் பரிஷேசனம் இரண்டையும் செய்வித்து, பாத்ய தீர்த்தம் கொடுத்து, **விஷ்ணோ ! அம்ருதம் பவது, அம்ருதோபஸ்தரணமஸி** என்று சொல்லி,

பிறகு **ஸர்வத்ர ..ஸ்தரணமஸி** என **ஆபோசனம்** செய்வித்து **ப்ராணே** என்று தொடங்கி ப்ராணாஹுதி செய்வித்து சுத்த தீர்த்தத்தால் ஹஸ்தோதகம் கொடுத்து, **ஸ்வாமிந:** என்று தொடங்கி **ஜுஷத்வம்** வரை சொல்லிய பின், ப்ரணவ வ்யாஹ்ருதியுடன் காயத்ரியை மூன்று தடவை ஜபம் செய்து ஜபத்திற்காகவிதிக்கப்பட்ட **மதுவாதா:**என்ற மூன்றுரிக்குகளையும் சொல்ல வேண்டும். பிறகு புருஷஸூக்தாதிகளை, கர்த்தாவும் அபிச்ரவணத்திற்காக வரிக்கப்பட்ட ப்ராஹ்மணர்களும் ஜபம் செய்ய வேண்டும்.

**குறிப்பு:—**அர்க்ய பாத்ய தீர்த்தங்களுக்கு பதிலாக அபிஷேக தீர்த்தத்திலேயே பரிஷேசனம் செய்விக்கலாம். **அபிஷேக ஜலேனைவ குர்யாதாபோசனத்வயம்** என வசனமிருக்கிறது. ஸ்மார்த்தர்களில் சிலர் பித்ரு கார்யத்தை முக்யமாகக் கருதி ச்ராத்தம் செய்த பின் தேவ பூஜை செய்வதால் அவர்களுக்குச் ச்ராத்த காலத்தில் **ஸ்வாமி தீர்த்தம்** இராது. சுத்தோதகம் **உபயோகிப்பர்.** **பரிஷேசனத்தைக்** கர்த்தா செய்விப்பதற்குப் பதிலாக **ஸ்வாமிந: யதா ஸௌகர்யம் பரிஷேசனம்** என்று சொல்லிவிட்டால் ஹஸ்தோதகம் தருவதற்கு முன்னுள்ள கார்யங்களைக் கர்த்தா செய்ய வேண்டாம். ஹஸ்தோதகம் கொடுத்து **ஸ்வாமிந:** என்று தொடங்கி **ஜுஷத்வம்** வரை சொன்

ஞல் போதும். **ப்ராணே நிவிஷ்ட:** என்ற இந்த தீர்க்க மந்த்ரங்களுக்குப்பதிலாக தினந்தோறும் சொல்லப்படுகின்ற **ப்ராணாய ஸ்வாஹா** முதலான சிறிய மந்த்ரங்களைச் சொல்லலாம். ஒவ்வொரு முறை **ஸ்வாஹா** சொன்னவுடன் **ப்ராணாயேதம் ந மம** என்றும், **ப்ராணாய நாராயணாய இதம் ந மம** என்றும் ஸ்வாஹா என்ற மந்த்ரத்திற்குமுன் இருக்கும் பதத்திற்குத் தக்கப்படி சேர்த்துச் சிலர் சொல்வர்.

**தத்தம்** தொடங்கி இதுவரையில் மந்த்ர உச்சாரணத்தில் ஏற்படும் பிழைகளுக்குப் பரிஹாரமாக காயத்ரியைச் சொல்ல வேண்டும் என **லகு ஆச்வலாயன** ஸ்ம்ருதி கூறுகிறது. **ப்ரஹ்மணே ஸ்வா**ஹா என்பதை ப்ராணாஹுதியில் சிலர் சொல்வதில்லை.

**न्यूनं चैवातिरिक्तं च मन्त्रादीनां भवेद्यदि । तद्दोषपरिहारार्थम् गायत्रीं समुदीरयेत्, [लघु-आश्व स्मृतिः २३-६१]**

காயத்ரியைச் சொன்னபிறகு **மதுவாதா:** என்ற மூன்று ரிக்குகளை போஜனத் தொடக்கத்தில் சொல்லும் அனுஷ்டானம் உள்ளது. இது காரணமாகவே ரிக்குகள் தரப்பட்டுள்ளன.

**अन्नेषु मधु सर्पिर्वा आसिच्य ... मधुमतीं च जपित्वा मध्विति च त्रिरुक्त्वा** எனக் கூறும்**பரிசிஷ்டவாக்யம்** (பக்கம் 234) இதற்குப் ப்ரமாணம்.

१७. (२) अथ भोजनान्ते कर्ता न वा उ इति सूक्तं जपेत् ।

१. न वा उ देवाः क्षुधमिद् वधं ददुः उताशितम् उपगच्छन्ति मृत्यवः

उतो रयिः पृणतो नोप दस्यति उतापृणन् मर्डितारं न विन्दते ॥

२. य आध्राय चकमानाय पित्वः अन्नवान् सन् रफितायोपजग्मुषे ।

स्थिरं मनः कृणुते सेवते पुरा उतो चित्स मर्डितारं न विन्दते ॥

३. स इद् भोजो यो गृहवे ददाति अन्नकामाय चरते कृशाय ॥

अरमस्मै भवति यामहूतौ उतापरीषु कृणुते सखायम् ॥

४. न स सखा यो न ददाति सख्ये सचाभुवे सचमानाय पित्वः ।

अपास्मात् प्रेयान्न तदोको अस्ति पृणन्तमन्यं अरणं चिदिच्छेत् ॥

५. पृणीयादिन्नाधमानाय तव्यान् द्राघीयांसमनु पश्येत पन्थाम् ।

ओ हि वर्तन्ते रथ्येव चक्रा अन्यमन्यमुप तिष्ठन्त रायः ॥

६. मोघमन्नं विन्दते अप्रचेताः सत्यं ब्रवीमि वध इत् स तस्य ।

नार्यमणं पुष्यति नो सखायं केवलाघो भवति केवलादी ॥

७. कृषन्नित् फालः आशितं कृणोति यन्नध्वानमप वृङ्क्ते चरित्रैः ।

वदन् ब्रह्माऽवदतो वनीयान् पृणन्नापिः अपृणन्तमभि ष्यात् ॥

८. एकपाद्भूयो द्विपदो वि चक्रमे द्विपात् त्रिपादमभ्येति पश्चात् ।

चतुष्पादेति द्विपदामभिस्वरे संपश्यन् पङ्क्तीरुपतिष्ठमानः ॥

९. समौ चिद्धस्तौ न समं विविष्टः संमातरा चिन्न समं दुहाते । ।

यमयोश्चित् न समा वीर्याणि ज्ञाती चित् सन्तौ न समं पृणीतः ॥

[ऋ.१०.११७[

குறிப்பு : ப்ராஹ்மணர்கள் போஜனம் செய்து முடித்தார்கள் என்பதைத் தெரிந்து கொண்டபின் ந வா உ என்ற ஸூக்தம் ஜபிக்கப்பட வேண்டும். இந்த ஜபம் சிஷ்டர்களின் அனுஷ்டானத்தில் உள்ளது. சிலர் செய்வதில்லை. ரிக்விதானம், இதன் ஜபத்தை வேறு பலனிற்காக விதித்திருக்கிறது.

## १८. तृप्तिप्रश्नादयः

### (१) तृप्तिप्रश्नः

**उपवीती–**

भुक्तवत्सु ब्राह्मणेषु, तान् तृप्तान् ज्ञात्वा दक्षिणहस्ते अन्नं वामहस्ते पानीयं चादाय-

स्वामिनः! भगवन्निवेदितेषु पदार्थेषु यत्किमपि अपेक्षितम्? अन्नं पानीयम्? तीर्थं प्रसादः? इति वा प्रार्थयेत ।

सकलं सम्पूर्णम् - इति प्रतिवचनम् ।

**मधु वाता ऋतायते मधु क्षरन्ति सिन्धवः । माध्वीर्नः सन्त्वोषधीः ॥**
**मधु नक्तमुतोषसो मधुमत्पार्थिवं रजः । मधु द्यौरस्तु नः पिता ॥**
**मधुमान्नो वनस्पतिर्मधुमाँ अस्तु सूर्यः । माध्वीर्गावो भवन्तु नः ॥**

इति मधुत्रयं जपित्वा–विश्वे देवाः, मधु मधु संपन्नम् ? सुसम्पन्नम् - अस्तु सम्पन्नं इति वा प्रतिवचनम् ।

विश्वेदेवाः, तृप्ताः स्थ? तृप्ताः स्मः इति प्रतिवचनम् ॥

**प्राचीनावीती—**

वसुरुद्रादित्यस्वरूपास्मत्पितृपितामहप्रपितामहाः - अन्नं पानीयम्? सकलं सम्पूर्णम्—

मधु वाता ऋतायते मधु क्षरन्ति सिन्धवः । माध्वीर्नः सन्त्वोषधीः ॥
मधु नक्तमुतोषसो मधुमत्पार्थिवं रजः । मधु द्यौरस्तु नः पिता ॥
मधुमान्नो वनस्पतिर्मधुमाँ अस्तु सूर्यः । माध्वीर्गावो भवन्तु नः ॥

अक्षन्नमीमदन्त ह्यव प्रियाः अधूषत ।
अस्तोषत स्वभानवो विप्राः नविष्ठया मती ।
योजा न्विन्द्र ते हरी ॥ [ऋ.१.८२.२]

इति चोक्त्वा—

वसुरुद्रादित्यस्वरूपास्मत्पितृपितामहप्रपितामहाः - मधु मधु सम्पन्नम् ? सुसम्पन्नम्--इति प्रतिवचनम् ।

पितृपितामहप्रपितामहाः तृप्ताः स्थ ? तृप्ताः स्मः इति प्रतिवचनम् ॥

**उपवीती—**

विष्णो! अन्नं पानीयम्?-सकलं सम्पूर्णम् - इति प्रतिवचनम् ॥

मधु वाता ऋतायते मधु क्षरन्ति सिन्धवः । माध्वीर्नस्सन्त्वोषधीः ॥
मधु नक्तमुतोषसो मधुमत्पार्थिवं रजः । मधु द्यौरस्तु नः पिता ॥
मधुमान्नो वनस्पतिर्मधुमाँ अस्तु सूर्यः । माध्वीर्गावो भवन्तु नः ॥
इति जपित्वा, विष्णो! मधु मधु सम्पन्नम् ? सुसम्पन्नम् - इति प्रतिवचनम् । तृप्तोऽसि? तृप्तोऽस्मि - इति प्रतिवचनम् ॥

**ப்ரயோக விளக்கம்**

**18. (1) த்ருப்தி ப்ரச்னம்**

*ப்ராஹ்மணர்கள் போஜனம் செய்து முடித்தபின், கர்த்தா உபவீதியாக, வலதுகையில் அன்னத்தையும் இடது கையில் தீர்த்தத்தையும் வைத்துக் கொண்டு* **ஸ்வாமிந:,...அபேக்ஷிதம்** *என்று கேட்டு*...**ஸம்பூர்ணம்** *என்ற பதிலைப் பெற்று,* **மது வாதா:** *என்ற மூன்று மந்த்ரங்களை ஜபித்து, விச்வேதேவரிடம் மதுமது ஸம்பன்*

